# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் [மார்க்சிஸ்ட்] தமிழ் வார ஏடு

கதிர் 14 | 22—8—76 | 8 பக்கம் 40 காசு | பொறி 21




### மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ்மாநிலசெயற்குழு உறுப்பினர்

# ஏ.பி.பழனிச்சாமிகாலமானர்

## பல்லாயிரம் பேர் கண்ணீர் அஞ்சலி



தமிழகம் முழுவதும்உள்ள மார்க்சிஸ்ட்கம்யூனிஸ்ட்கட்சித் தோழர்களாலும, மதுரை மாவட்ட மக்களாலும் 'ஏ.பி.பி.' என அன்புடன் அழைக்கப்பட்ட தோழர் ஏ. பி. பழனிச்சாமி அவர்கள் கடந்த13-8-76ந் தேதி மாலை 6-15 மணியளவில் இயற்கை எய்தினர்.

மூளையில் 'மோட்டார் நியூராண்" எனும் வியாதி உண்டாகி கடுமையான பாதிப்புக்கு ஆளாகிய தோழர் பழனிச்சாமி சுமார் ஒண்ணரை மாதகாலத்துக்கு முன் மதுரை அரசு பொது மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டார். தீவிரமான சிகிச்சைகள் அளிக்கப்பட்ட போதிலும், இன்றுள்ள விஞ்ஞானத்தின் வளர்ச்சியைக் கொண்டு அந்த நோயிலிருந்து தோழர் பழனிச்சாமியை மீட்க இயலவில்லை.

தோழர் பழனிச்சாமியின் உயிர் பிரிந்தவுடன், அவரது பூதவுடல் ஆம்புலன்ஸ் வண்டி மூலம், மதுரை ஞான ஒளிவுபுரத்தில் உள்ள பழனிச்சாமியின் இல்லத்துக்குக் கொண்டு வரப்பட்டது. செங்கொடியால் போர்ததப்பட்ட அவரது பூதவுடல் பொதுமக்கள் அஞ்சலி செலுத்துவதற்காக வைகக்பபட்டிருந்தது.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநில செயற்குழு உறுப்பினரான தோழர்பழனிச்சாமியின் மறைவுச் செய்தி கேட்டு மதுரை நகரிலும், மாவட்டத்திலுமிருந்தும் கட்சித் தோழர்களும், தொழிலாளர்கள், பொதுமக்களும் சாரி சாரியாக வந்து தமது இதயத் தலைவனுக்கு அஞ்சலி செலுத்தினர்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலத் தலைவர்கள் தோழர்கள் எம் ஆர் வெங்கட்ராமன், என் சங்கரய்யா, கே முத்தையா ஆகியோரும் மாவட்ட, மாநகரத் தலைவர்களான தோழர்கள் எம் முனியாண்டி, கே. சுப்பையா, கே. பூச்சி, எஸ் ஏ பெருமாள், ஏ எஸ் காளிமுத்து, பி உசேன் மீர் வி வாழவந்தான், மூ கணபதி ஆகியோரும், மாதர் சங்க மாநிலச் செயலாளர் பாப்பா உமாநாத்தும், துணைச் செயலாளர் மைதிலி சிவராமனும் தோழர் நன்மாறன்தலைமையில் வாலிபர் முன்னணித் தோழர்களும், சு பாலதண்டாயுதபாணி தலைமையில் மாணவத் தோழர்களும், ஆர் சீதாலட்சுமி அம்மாள் தலைமையில் மதுரை மாதர்சங்கத் தோழர்களும் மரியாதை செலுத்தினர். கட்சிக் கிளைகள் சார்பிலும் வெகுஜன ஸ்தாபனங்கள்சார்பிலும் மாலைகள் அணிவிக்கப்பட்டவண்ணமிருந்தன.

14-ந்தேதி மாலை 4மணிக்கு இறுதி ஊர்வலம் புறப்படுவதற்கு முன்பு, கட்சியின் மாநிலக்குழு சாாபில் தோழர்கள் எம் ஆர் வெங்கட்ராமன், என் சங்கரய்யா, கே. முத்தையா, வகாப், கிரி ஆகியோர்மலர்வளையம்வைத்து அஞ்சலி செலுத்தினர்.

கட்சியின் மாவட்டக்குழு சார்பில் தோழர்கள் கே. பி. ஜானகியம்மாள், கே.சுப்பையா எஸ், ஏ. பெருமாள், உ ச உலகப்பா, ஏ எஸ் காளிமுத்துஆகியோரும்—மதுரைக்கமிட்டிசார்பில் தோழாகள் எம் முனியாண்டி, ப மு குமார், கே பூச்சி வாழவந்தான, ஆகியோரும்மலர் வளையங்கள் வைத்து அஞ்சலி செலுத்தினர்.

தமிழ்மாநில சிஐடியூ சார்பில் தோழர் கே. வைத்தியநாதன் மலர்வளையம்வைத்தார்.

இந்தியக்கம்யூனிஸ்ட்கட்சி சார்பில் எம் ரத்தினம, எஸ். பி, ஆண்டி, ஏ. கணபதி, எம். ராமமூர்த்தி ஆகியோரும்,

அதிமுக சார்பில் முன்னுள் மேயர் எஸ். முத்துவும்.

ஸ்தாபனக் காங்கிரஸ்கட்சி சார்பில் மதுரை அர்பன் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் பி வடிவேலுவும், தி மு கழகம் சார்பில் எஸ் காமராஜும், பார்வர்டுபிளாக் சார்பில் வழக்கறிஞர் கே கந்தசாமி, ஆளும் காங்கிரஸ்சார்பில் மதுரை அ ஜி காக துணைத்தலைவர் வி கே நாராயணக்கோனும், எம் சுப்பையாவும், சோசலிஸ்ட் கட்சி சார்பில் வழக்கறிஞர் என் கே பாகுலேயனும் மலர் மாலைகள் அணிவித்து மரியாதை செலுத்தினர்.



மறைந்த மக்கள் தலைவருக்கு மாநிலக்குழு சார்பில் தோழர்கள் கே. முத்தையா, எம். ஆர். வெங்கட்ராமன் என். ச்ங்கரய்யா ஆகியோர் மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்துகிறூர்கள்.

### நகரப் பிரமுகர்கள்

மதுரை பல்கலைக் கழக சிண்டிகேட் (ஆட்சிக் குழு) உறுப்பினர் பேராசிரியர் ஏ சங்கரநாராயணன், இந்தோ—சிலோன் ஓட்டல் உரிமையாளர் சம்பந்தம்பிள்ளை, டாக்டர் டி திருஞானம, நெல்லை எஸ் வேலாயுதம் சென்ட்ரல் சினிமா மாயாண்டி சேர்வை, வி கே நாயர் ஆகியோரும் வந்திருந்து கண்ணீர் மல்கமலர்மாலைகள் அணிவித்து மரியாதை செய்தனர்.

### இறுதி ஊர்வலம்

தோழர்கள் எம் ஆர் வெங்கட்ராமன். என் சங்கரய்யா, கே முத்தையா ஆகியோரும் ஏனைய தோழர்களும சோகமே உருவாக நடந்து சென்று தோழர் பழனிச்சாமியின் பூதவுடலைத் தூக்கி செங்கொடி கட்டப்பட்ட வண்டியில்வைக்க இறுதி ஊர்வலம் புறப்பட்டது. இறுதி ஊர்வலம் புறப்படத் துவங்கியதும் பழனிச்சாமியின் குடும்பத்தினரும் உறவினர்களும் கதறியழுத காட்சி நெஞ்சத்தை நெகிழச் செய்தது

பல்லாயிரக்கணக்கானோர் கலந்துகொண்ட இறுதி ஊர்வலம் நகரின் முக்கிய வீதிகள் பொன்னகரம் — மதுரை மில் கேட்—மணி நகரம் — சிம்மக்கல், யானைக்கல்— கல்பாலம்— செல்லூர் வழியாக தத்தனேரி மயானம் நோக்கிச் சென்று கொண்டிருக்கையில் 'சோ' வென மழை பெய்தது. அந்த மழையிலும் கட்சித் தலைவர்களும் தோழர்களும், பொது

(8-ம் பக்கம் பார்க்க)



(1) தமிழ் மாநில சிஐடியூ சார்பில் கே வைத்தியநாதனும் (2) மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மதுரை கமிட்டி சார்பில் தோழர்கள் எம் முனியாண்டி, பி எம் குமார், கே பூச்சி, வி வாழவந்தான் ஆகியோரும (3) மதுரை-முகவை மாவட்டக் குழு சார்பிலும் தோழர்கள் ஜானகி அம்மாள், பெருமாள், காளிமுதது, மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினர்.

# சோசலிஸ்ட் வியட்னாம் பிறப்பு "நான் தான்" தலையங்கம்

ஒன்றுபட்ட வியட்னாமிற்கு வியட்னாம் சோசலிட் குடியரசு எனப்பெயரிட எடுத்த முடிவை ஆதரித்து வியட்னாம் தொழிலாளர் கட்சியின் ஏடான "நான் தான்" தலையங்கம் ஒன்றை ஜூலை 3-ல் எழுதியது. அதில் வியட்னாம் சோசலிஸ்ட் குடியரசின் தேசியக்கொடி, தேசிய சின்னம், தேசிய பாடல், தலைநகர் ஆகியவற்றையும் தேர்ந்தெடுத்தது என்றும் வியட்னாம் சோசலிஸ்ட் குடியரசின் உயர்ந்த தலைவர்களையும் உயர்ந்த அரசு அமைப்பையும் தேர்ந்தெடுத்தது என்றும் :அத் தலையங்கம் குறிப்பிட்டு எழுதியதின் சுருக்கம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது:—

"முழு விடுதலையும் இணைப்பும் அடைந்த பிறகு இப்போது வியட்னாம் 5கோடி மக்களைக் கொண்ட நாடாகும்; அது,ஒரு மிக உயர்ந்த சமூகஅமைப்பை கட்டுவதில் வேகமாக செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.

மக்கள் தேசியஜனநாயகப் புரட்சிக் காலம் பெருமைமிக்க வெற்றியோடு முடிவடைந்துள்ளது.

நாடு முழுவதும் சோசலிஸ்ட் புரட்சிக்கான ஒரு புதியகாலம் ஆரம்பித்துள்ளது. கட்சியின் தலைமையின்கீழும் சோசலிஸ்ட் அரசின் நிர்வாகத்தின் கீழும் சோசலிஸ்ட் புரட்சிக்கான பெரும் திட்டங்களை வியட்னாம் முழுவதும் அமுல் நடத்திக் கொண்டிருக்கிறது. இன்று நடைமுறைக்கு வந்து கொண்டிருக்கும் வியட்னாம் சோசலிஸ்ட் குடியரசானது நம்முடைய மக்களின் நீண்ட நெடிய போராட்டத்தின் பலன். ஜனாதிபதி ஹோ-சி-மின் கூறியது போல, 1945-ல் ஆரம்பித்த ஆகஸ்ட் புரட்சியிலிருந்து கடந்த 31 வருடங்களாக வீரமிக்க போராட்டங்களை நடத்தி இரு பெரும் ஏகாதிபத்தியங்களை —பிரெஞ்சு, அமெரிக்கா— தோற்கடித்து குறிப்பிடத்தக்க மதிப்பை வியட்னாம் மக்கள் சம்பாதித்துள்ளனா. உலக தேசிய விடுதலை இயக்கத்திற்கு மதிப்பு மிக்க முன்னுதாரணததை அளித்துள்ளனா.

### புதிய மனிதனை உருவாக்கும் பணி

வியட்னாம் சோசலிஸ்ட் குடியரசை அமைத்ததன் மூலம், ஹோ-சி-மினின் புனிதமான உயிலில் கூறியபடி, வாழ்வதென்ற அவர் தம் முடிவை பிரகடனப்படுத்தியுள்ளனர்: அதாவது, சமாதானபூர்வமான பிரகாசமிக்க வியட்னாமை கட்டுவதெனவும்உலகப்புரட்சிக்கு பெரும் முக்கியத்துவம் வழங்குவதெனவும் பிரகடனம் செய்துள்ளனர்.

ஒரு புதிய நிர்வாகத்தை ஒரு புதிய பொருளாதாரத்தை ஒரு புதிய வகையான மனிதனை வெற்றிகரமாக உருவாக்குவதற்கு நம்முடைய மக்கள் தேவையான பொருளாதாரநிலைமைகளையும் துடிப்புணர்ச்சியானநிலைமைகளையும்கொண்டுள்ளனர்.

### புதிய நாடாக புனர் நிர்மாணம்

மேலும் வியட்னாம் தொழிலாளர் கட்சியின்ஏடான நான் தான், அக்கட்சியின் முதல் செயலாளர் தேசிய அசெம்பிளிக்கான அறிக்கையில் குறிப்பிட்டதை மேற்கோள் காட்டியது.

"நிச்சயமாக நம்முடைய தந்தையர் நாட்டை 10மடங்கு உயர்வாகவும் அழகாகவும் உருவாக்கி ஒரு புதிய நாடாக புனர்நிர்மாணம் செய்வோம்' ஒரு வளர்ச்சியடைந்த மகிழ்ச்சிகரமான வாழ்க்கையோடு, நவீன தொழில், நவீன விவசாயம், பலமான தேசிய பாதுகாப்பு, முன்னேறிய கலாச்சாரம். விஞ்ஞானம் ஆகியவற்றோடு கூடிய ஓர் ஒன்றுபட்ட சோசலிச நாடாக நம்நாட்டை கொண்டு வருவோம். இம்முடிவுகளை செயல்படுத்துவதற்குத் தேவையான அனைத்து சூழ்நிலைமைகளையும் நாம் கொண்டுள்ளோம்.

இக்காலத்தில் நமது நடவடிக்கைக்கான கோஷம் இது தான்;

"எல்லாம் உற்பத்திக்காக! எல்லாம் சோசலிஸ்ட் நிர்மாணததிற்காக! எல்லாம் நம்முடைய தந்தையர் நாட்டின் சக்திக்காகவும் பிரகாசத்திற்காகவும்! எல்லாம் மக்களுடைய மகிழ்ச்சிக்காகவே!"

---

## இந்தியாவில் 9 ஆண்டுகளில்

# அந்நிய முதலீடு இரு மடங்கானது

1964-ம் ஆண்டிலிருந்து 1973-ம் ஆண்டு வரையிலான ஒன்பது ஆண்டு காலத்தில் இந்தியாவில் உள்ள ஒன்றிணைக்கப்பட்ட பெருந்தொழில்களிலும் அந்நிய வர்த்தக ஸ்தாபனங்களிலும் அன்னிய முதலீடு இருமடங்காக உயர்ந்துள்ளது. 1973-ம் ஆண்டில் அந்நிய முதலீடு 1816 கோடியே 30 லட்ச ரூபாய் ஆகும்.

1973-ல் பிரிட்டிஷ் முதலீடு 649 கோடியே 60 லட்சமாகும், அமெரிக்காவின் முதலீடு 509 கோடியே 70லட்சம்: மேற்கு ஜெர்மனியின் முதலீடு 156 கோடியே 20 இலட்சம் ரூபாய். தவிர, ஜப்பான் பிரான்ஸ், சுவீட்சர்லாந்து, கனடா, சுவீடன் போன்ற நாடுகளது மூலதனங்களும் உள்ளன. இதெல்லாம் போக சர்வதேச ஸ்தாபனங்களின் பெயரில் 108 கோடியே 20 லட்சம் ரூபாய் அந்நிய மூலதனம் இந்தியாவில் போடப்பட்டுள்ளது,

மொத்த அந்நிய மூலதனத்தில்—அதாவது 1816கோடியே 30 இலட்சம் ரூபாயில் 1059 கோடியே 20 இலட்சம் ரூபாய் உற்பத்தித் தொழிற்சாலைகளில் போடப்பட்டுள்ளது. இது மொத்த அந்நிய மூலதனத்தில் 58 சதவீதம் ஆகும். 28 சதவீதம் தொழில் நுட்பம் மற்றும் ரிப்பேர் வேலைகளுக்கான முதலீடு ஆகும்,

1972—73-ல் அந்நிய தனியார் முதலீடு 61 கோடி ரூபாய் உயர்ந்துள்ளது என அண்மையில் வெளியிடப்பட்ட ரிசர்வ் வங்கியின் ஆய்வு ஒன்று கூறுகிறது,

அமெரிக்காவின் முதலீட்டில் ரூ 25 கோடியும், மேற்கு ஜெர்மனியின் முதலீட்டில் ரூ22 கோடியும், பிரிட்டிஷ் முதலீட்டில் 8 கோடி ரூபாயும் உயர்ந்துள்ளது. இத்தாலி, ஜப்பான் உட்பட பல நாடுகளது முதலீடுகளில் சிறிதளவு 1972-73ல் குறைந்துள்ள போதிலும், அந்நிய முதலீட்டில் சர்வதேச ஸ்தாபனங்களின் பங்கு இந்த ஓராண்டு காலத்தில் 18 கோடி ரூபாய் உயர்ந்துள்ளது.

மொத்த முதலீடான 1816கோடியே 30 லட்சம் ரூபாயில் வெளிநாடுகளில் உள்ள தலைமை ஸ்தாபனங்களுக்கு இங்குள்ள கிளைகள் செலுத்த வேண்டிய கடன் ரூ 224கோடியே70லட்சம் உயர்ந்துள்ளது. அந்நியக் கட்டுப்பாட்டில் உள்ள கம்பெனிகளில் போடப்பட்டுள்ள முதலீடு ரூ 642 கோடியே 30லட்சம் ஆகும்.

மற்ற நீண்டகாலக் கடன் மொத்தம் 944கோடியே 30லட்சம் ரூபாயாகும். கடன்களாக வாங்கப்பட்ட 580கோடி ரூபாயும், சப்ளை செய்வதற்கான கடன் தொகை 255 கோடி ரூபாயும் இதில் அடங்கும்.

1973 மார்ச் மாதத்துடன் முடிந்த ஒரு வருட காலத்தில் இக்கடனில் பேலும் 10கோடி ரூபாய் உயர்ந்தது 1972 மார்ச் மாதத்துடன் முடிந்த ஒருவருட காலத்தில் இக்கடன் பேலும் 27கோடி ரூபாய் உயர்ந்தது. முந்தைய நான்குவருடங்களில் கடன் தொகை உயர்வானது ஆண்டுக்கு சராசரி 24கோடி ரூபாயாக இருந்தது.

---

## சுவரண்சிங் கமிட்டி பரிந்துரை மீது கருத்துக் கூற சிறப்புக்கூட்டம்

இந்திய அரசியல் அமைப்புச் சட்டமாறுதல்கள் குறித்து சுவரண்சிங் கமிட்டி செய்துள்ளபரிந்துரைகள் மீது கருத்துக் கூறும் முகத்தான் மதுரையில் உள்ள சி ஐ டி யூ சங்கங்கள் சார்பில் கடந்த 10-ந் தேதி மாலை ராதாகிருஷ்ண திருமண மண்டபத்தில் சிறப்புக் கூட்டம் நடந்தது. நகர் கைநெசவு தொழிலாளர் சங்கத் தலைவர் தோழர் ஜெ. எஸ். கிருஷ்ண மூர்த்தி தலைமை வகித்தார்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மதுரைக் கமிட்டி உதவிச் செயலாளர் கே. பி. ஜானகியம்மாள், மதுரை பஞ்சாலைத் தொழிலாளர் சங்கப் பொதுச் செயலாளர் ப. மூ. குமார், மோட்டார் தொழிலாளர் சங்க உதவிச் செயலாளர் எஸ், ஏ. பெருமாள், மின்சாரத் தொழிலாளர் சங்கம் சார்பில் இ. எஸ். சுந்தரம், விவசாயிகள் சங்கம் சார்பில் கே. சுப்பையா, ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியன் சார்பில் கே. பழனிவேலு, எவர்சில்வர் பாத்திரத் தொழிலாளர்சங்கம் சார்பில் மு. கணபதி, மதுரை மாவட்ட ஐக்கிய கைநெசவுத் தொழிலாளர் சங்கம் சார்பில் கே. அய்யாவு ஆகிய தோழர்கள் உறையாற்றினர்,

கூட்டத்தின் இறுதியில் தீர்மானத்தை தோழர் வி. வாழவந்தான் முன்மொழிய கூட்டத்தினர் அனைவரும் கரவொலி எழுப்பி ஆதரவைத் தெரிவித்தனர்.

---

## சேலம் கேம்பில் வாலிபர் முன்னணி

சேலம் கேம்பில் சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி அமைப்புக்கூட்டம் கடந் 3-ந் தேதியன்று நடந்தது.

சோசலிஸ்ட் வாலிபர் முன்னணியின் நோக்கங்கள் பற்றியும், அரசியல் அமைப்புச் சட்டமாறுதல்கள்பற்றியும் சுவரண்சிங் கமிட்டி செய்துள்ள பரிந்துரைகள் மீது கருத்துக்களை தெரிவித்தும், சோசலிசம் பற்றியும், பொதுமக்களது பிரச்னைகள் பற்றியும் தோழர்கள் ஆர். கிருஷ்ணனும் சி ஐ டி யூ சார்பில் கே, பெருமாளும் தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் சார்பில் ஆர். சொக்கரும் பேசினர். பின்னர் நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தலைவராகசதாசிவம். துணைத் தலைவராக இராசகோபால், செயலாளராக மரியற்புதம். துணைச் செயலாளராக சித்தார்த்தன், பொருளாளராக கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் தோ்ந்தெடுக்கப்பட்டனர்.

---

## நெல்லைமாவட்டத்தில் சிறப்பு பொதுக்கூட்டம்

நெல்லை மாவட்டம் பொது தொழிலாளர் சங்கத்தின் சார்பாக சங்கரன்கோவில் சங்கர் சினிமா தியேட்டரில் 11—7—76-ந்தேதியன்று காலை சிறப்புப் பொதுக்கூட்டம் நடந்தது. வழக்கறிஞர் தோழர் ஜி சீனிவாசகம் தலைமை வகித்தார். தோழர்கள் எம் எஸ் பெரியசாமி, கே கந்தசாமிஆகியோர் உரையாற்றினர்,பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன,

---

## சிவகிரியில் சங்கரய்யா

இங்கு 15—7—76-ந்தேதியன்று ஜெயராம் சினிமா தியேட்டரில் நடந்த சிறப்புக் கூட்டத்துக்கு தோழர் கே. கோதண்டராமன் தலைமை வகித்தார்.

கட்சியின் மாநில செயற்குழு உறுப்பினர் தோழர் என். சங்கரய்யா சிறப்புரையாற்றினார்.

---

## மின்சார ஊழியர் கன்வென்ஷன்

சிஐடியூவில் இணைக்கப்பட்டுள்ள தமிழ்நாடு மின்சார ஊழியர்சங்கததின் நாகர்கோவில் டிவிசனல் கன்வென்சன் நடந்தது. மதுரை தோழர் கே. வாசுதேவன் பி. சி. வேலாயுதம் ஆகியோர் சிறப்புறை ஆற்றினர். தொழிலாளர் முன்னேற்ற சங்க கன்னியாகுமரி திட்டச் செயலாளா தோழர் ஜோசப் வாழ்த்துரை வழங்கினார்.

---

## வருந்துகிறோம்

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கடசியின் பெண்ணாடம கிளைத் தோழரும் அருணா சர்க்கரை ஆலை சிஐடியூ உறுப்பினருமான தோழா் பெருமாள் காலமானார் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம், அவருக்கு பெண்ணாடம் கிளை, சிஐடியூ ஆகியவற்றின் சார்பில மலா வளையம வைத்து இறுதி மரியாதை செலுத்தப்பட்டது. இறுதி ஊர்வலததில் தோழர்கள் ஈ எம் செல்லப்பன் [கிளைச்செயலாளர்)டி. பஞ்சநாதன், சுந்தரம், ராமன், டி. குழந்தைவேலு மற்றும் ஏராளமானோர் கலந்துகொண்டனர்.

# இந்தோ - சைனா நாடுகளுக்கு சீனத்தின் உதவி

சமீப காலங்களில் அமெரிக்காவின் ஆக்கிரமிப்பிலிருந்தும் உள்நாட்டு பிற்போக்கு ஆட்சியாளர்களிடமிருந்தும் விடுதலைபெற்ற இந்தோ-சைனா நாடுகளுக்கு (வியட்னாம், கம்போடியா, லாவோஸ்) மககள் சீனம் தனது சகோதரத்துவ உதவியை அளித்து வருகிறது. அவ்வுதவிகள் எவ்வித நிபந்தனையற்ற அடிப்படையில் அளிக்கப்படுகின்றன அந்நாடுகளின் விவசாய, தொழில் வளர்ச்சி, முன்னேற்றம் ஆகியவைகளை அடிப்படையாகக் கொண்டு வட்டியின்றியும், இலவசமாகவும் உதவிகள் அளிக்கப்படுகின்றன; மேலும் வட்டியில்லாமல் அளிக்கப்படும்கடன்கள்நீண்ட காலத் தவணையுள்ளதாகவும் உள்ளன.

## கம்போடியா

1970-ம் ஆண்டில் கம்போடிய இளவரசர் சிஹானூக் ஆட்சியிலிருந்து லான்நால் என்னும் பிற்போக்குவாதியால் அமெரிக்காவின் உதவியுடன் கவிழ்க்கப்பட்டார். எனவே, விடுதலை இயக்கத்தை இணைத்த அரசாங்கத்தை— லான்நாலுக்கெதிரான அரசாங்கத்தை— சிஹானூக் பீகிங்கில் ஆரம்பித்தார். லான்நால் அரசாங்கம் 1975-ல் முறியடிக்கப்பட்டது. இக்காலக்கட்டத்தில் சிஹானூக் அரசாங்கத்துக்கு சுமார் 100கோடி டாலர் (800 கோடி ரூபாய்) மதிப்புள்ள உதவிகளை சீனம் செய்துள்ளது.

மேலும், கம்போடியா விடுதலை அடைந்த பின்பு—1975-ம் ஆண்டிலேயே— அப்போது அந்நாட்டின் உதவிப்பிரதமராகவும் பாதுகாப்பு அமைச்சராகவும் இருந்த கியூசம்பன் (இப்போது அந்நாட்டின் ஜனாதிபதி) சீனத்துடன் ஒப்பந்தம் செய்தார். அவ்வொப்பந்தத்தின்படி சீனத்தினிடமிருந்து புதிய பொருளாதார உதவிகளைப் பெற்றாலும் உள்நாட்டு யுத்த காலததில் அளிக்கப்பட்ட உதவிகள் இலவசமானதாக அறிவிக்கப்பட்டது.

புதிய பொருளாதார ஒப்பந்தத்தின்படி கம்போடியாவின் அன்னியச் செலாவணி தேவையை முன்னிட்டு2கோடி டாலர் (16 கோடி ரூபாய்) மதிப்புள்ள உதவி மானியமாக அளிக்கப்பட்டது.

1975— ஆகஸ்டில் கையெழுத்தான அந்த உதவியில் மீதிப்பகுதி கடனாக அளிக்கப்பட்டதாகும். அக்கடனில் ஒரு பகுதி 6 வருடங்களில் திருப்பிக் கொடுக்கப்பட வேண்டும். மீதிப்பகுதி நீண்டகாலத்தவணை கொண்டதாகும். ஆனால் இரண்டிற்கும் வட்டி அளிக்கப்படவேண்டியதில்லை.

அவ்வொப்பந்தப்படி அளிக்கப்பட்ட உதவியானதுதொழில் நுணுக்க பொருளாதார கூட்டு ஒத்துழைப்பு அடிப்படையில் அமைந்ததாகும்.

## லாவோஸ்

இந்நாட்டோடு 1962-ம் ஆண்டிலிருந்து சீனா உறவு கொண்டது. அதே ஆண்டிலிருந்து உதவிகளும் மேற்கொள்ளப்பட்டன. ஆனாலும் அவ்வுதவிகளும் உறவுகளும் அந்நாட்டின் கூட்டணி அரசில் அங்கம் வகித்த பதெட்லாவோ விடுதலை ஸ்தாபனத்தோடான உறவின் அடிப்படையில் மேற்கொள்ளப்பட்டது. 1963-ல் அக்கூட்டணி அரசாங்கம் வீழ்ச்சியடைந்தது. அதனால் லாவோஸ் அரசாங்கத்தோடு கூடிய உறவானது பதெட்லாவோ விடுதலை ஸ்தாபனத்தோடுமட்டும் வைத்துக்கொள்ளப்பட்டது.

1975-ம்ஆண்டு ஆகஸ்டில் பதெட்லாவோ விடுதலை ஸ்தாபனம் வெற்றிபெற்று அந்நாடு முழுமைக்குமான அதிகாரததை எடுத்துக்கொண்டது.

அதன் பின்பு அந்நாட்டிற்கு மககள் சீனம் புதிய பொருளாதார உதவிகளைமானியமாகவும் வட்டியில்லாக் கடனாகவும் அளித்துள்ளது.

லாவோஸின் வடக்குப்பகுதியில் நாம்பாக்லுவாங் பிரபாங் போன்ற நெடுஞ்சாலைத் திட்டங்களையும் அமைத்துத்தர ஒப்புக்கொண்டு அவைகளை மேற்கொண்டுள்ளது.

லாவோஸ் 1975 ஆகஸ்டில் முழுவிடுதலை அடைந்த பிறகு அவ்வருட டிசம்பரில்இரு நாடுகளுக்குமிடையே ஏற்பட்ட பொருளாதார— கூட்டு ஒத்துழைப்பு ஒப்பந்தப்படி வட்டியில்லாத நீண்ட காலத்தவணை கொண்ட கடன் அளிக்க மக்கள் சீனம் ஒப்புக்கொண்டுள்ளது. இவ்வுதவி லாவோஸின் தொழில்வளர்ச்சி, தொழில் நுணுக்க வளர்ச்சி ஆகியவைகளை அடிப்படையாக கொண்டதாகும். மேலும் 1962-ல் ஒப்பந்தம் ஏற்பட்டு இடைக்காலத்தில் நிறுத்தப்பட்ட நெடுஞ்சாலை கட்டுமாணம் போன்றவைகளுக்கு மீண்டும் உதவி அளிக்க இவ்வொப்பந்தத்தில் வகை செய்யப்பட்டுள்ளது.

## வியட்னாம்

சீனத்தின் உதவியால் வியட்னாமில் பல சிறிய, பெரிய தொழிற்சாலைகள் அமைக்கப்பட்டுள்ளன, வியட்னாமின் தலைநகரான ஹனோய்க்கு வடக்கே உள்ள ஹாபாக்கில் நைட்ரஜன் உரத்தொழிற்சாலை ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. இது கடந்த ஜனவரியில் தான் கட்டி முடிவடைந்தது.

மேலும் வியட்ரி என்னும் நகர் ஹனோய்க்கு வடமேற்கேயுள்ளது. இங்குள்ள ரசாயனத் தொழிறசாலைகள் சீனத்தின் தொழில் நுணுக்க உதவியோடும் இயந்திர சப்ளை உதவியோடும் விரிவுபடுத்தப்பட்டு புதுப்பிக்கப்பட்டுள்ளன மேலும் நின்பின் நகரில் அனல்மின் சார உற்பத்தி நிலையம் கட்டித் தரப்பட்டது. இது கடந்த ஜூனில்தான் மின்சார உற்பத்தியைத் தொடங்கியது. இதன் உற்பத்தி சக்தி ஒரு லட்சம் கிலோ வாட் மின்சாரமாகும்.

இவைகளுக்கு சீனம் அளித்த இயந்திரங்களும், முக்கியப் பொருட்களும் இலவசமாகவே வழங்கப்பட்டுள்ளன.

## வடகொரியா

இதுஇந்தோ—சைனா பகுதியில் சேராத நாடாகும்.

சீனாவிலிருந்து இந்நாட்டிற்கு கச்சாஎண்ணெய்கொண்டு செல்வதற்கான எண்ணெய்க் குழாய்களை சீனம் அமைத்துக் கொடுத்துள்ளது. இக்குழாய் இணைப்பு "சீன — கொரிய நட்பு எண்ணெய் குழாய் வழி" என்பதாகும். இது இந்த ஆண்டின் ஜனவரியில் முடிந்து, செயல்படத்துவங்கியுள்ளது.

மேலும் தென் கொரியாவில் அமெரிக்காவின் 40 ஆயிரம் ராணுவத்தினர் நவீன ஆயுதங்களுடன் தளம் கொண்டுள்ளனர். இதன் தொடர்ச்சியாக இரு கொரியாக்களின் இணைப்புப்பிரச்சினை தொடர்ச்சியாகவும் அப்பகுதியில் யுத்தபதட்ட நிலைநீடித்து வருகிறது.

எனவே, வடகொரியாவுடன் சீனம் ஒரு ராணுவ ஒப்பந்தத்தைச் செய்துள்ளது. 1971-ம் ஆண்டு இரு நாடுகளுக்குமிடையே ஏற்பட்ட இவ்வொப்பந்தப்படி வடகொரியாவுக்கு சீனா இலவசமாகராணுவ உதவி செய்ய வேண்டும். இதில் 1950-53-ம்ஆண்டுகளில் கொரியாவின் மீது அமெரிக்கா தொடுத்த தாக்குதலின்போது கொரிய மக்களுக்கு சீனம் அளித்த ராணுவ உதவிகளும் அடங்கும்.

---

## சோசலிச ஜெர்மனியில் வேலைநேரம் குறைப்பு பிரசவ விடுமுறை அதிகரிப்பு

ஜெர்மன் ஜனநாயகக் குடியரசு (கிழக்கு ஜெர்மனி) அரசாங்கம், அந்நாட்டின் தொழிலாளர்களின் வேலை நேரத்தை குறைக்க உள்ளது.

மே மாதத்தில் அந்நாட்டின் சோசலிஸ்ட் ஒற்றுமைக் கட்சியின் 9-வது காங்கிரசில் நிறைவேற்றப்பட்ட சமூக— பொருளாதார தீர்மானததின் அடிப்படையில் இந் நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது.

இந்நடவடிக்கையின் படி தொழிலாளர்களின் வேலை நேர குறைப்புத்திட்டம் அடுத்த ஆண்டு மே மாதத்திலிருந்து அமுலுக்குவரும். அதன்படி வாரத்தின் 5 நாட்களில்42மணி நேரம் வேலைசெய்யும் தொழிலாளர்கள் 40 மணிநேரம் வேலை செய்வார்கள். ஆனால் சம்பளம் அதே சம்பளமே நீடிக்கும். குறைக்கப்பட்ட நேரத்தில் வேலைசெய்யும் தொழிலாளர்களுக்கு கூடுதலான கூலி கொடுக்கப்படும்.

பெண்களுக்கு பிரசவகால விடுமுறை. முழுச்சம்பளத்துடன் 18 வாரங்கள் அளிக்கப்பட்டு வந்தன. ஆனால் அவ்விடுமுறை 26 வாரங்களாக அதிகரிக்கப்பட்டுள்ளது.

## ஐ. நா. வின் புள்ளிவிவரக் கணக்கு

1975 ஆம் ஆண்டின்மத்தியில் உலக மக்கள் தொகை386 கோடிஎன்றும், பிறப்பு விகிதம் இதேநிலையில் போனால் 2007-ம் ஆண்டில் உலகமக்கட்தொகை இப்போது இருப்பதைப் போல் இரு மடங்காக இருக்கும் என்றும் ஐ. நா கடந்த ஆண்டு வெளியிட்ட ஒரு குறிப்பு கூறுகிறது.

உலக மக்கட் தொகையில் 60சதவிகிதம் ஆசியாவில் உள்ளது என்றும் மக்கட் தொகை பெருக்கம் ஆண்டுக்கு 2·1 சதவீதம்என்றும் குறிப்பிட்ட அந்த ஐ நா புள்ளிவிவரக் குறிப்பு, ஆப்பிரிக்காவில்தான் பிறப்பு விகிதம் அதிகம் என்றும் கூறியுள்ளது. மக்கட் தொகை அதிகம் உள்ள நகரங்கள் சீனத்தில் உள்ள ஷாங்காய் நகரமும், ஜப்பானின் தலைநகரான டோக்கியோவும் என்றும் அக் குறிப்பில் கூறப்பட்டிருந்தது.

## உலக மக்கள்தொகை 1986-ல் 500 கோடி

இன்னும் 10 ஆண்டுகள் கழித்து அதாவது, 1986 ஆம் ஆண்டு வாக்கில் உலக மக்கட் தொகை 500 கோடியாக இருக்கும் என்று மத்திய சுகாதார அமைச்சர் டாக்டர் கரன் சிங் இங்கு நடந்த ஒருவிழாவில் கடந்த 8-ந்தேதி கூறினார்.

1960 முதல் 1975 வரையான 15 ஆண்டு காலத்தில் மக்கட்தொகை 100 கோடி உயர்ந்துள்ளதுஎன்றார். 1830ல் மக்கட் தொகை 100 கோடி என்றும், 1830முதல் 1930வரையான ஒரு நூற்றாண்டு காலத்தில் மக்கள் தொகை 200 கோடியாக இரட்டித்து விட்டது என்றும் குறிப்பிட்ட அவர், 1974-ல் இது சுமார் 400 கோடியாகி விட்டது என்றும் கூறினார்.

## சர்வதேச திரைப்பட விழா சீனாவுக்கும் பாகிஸ்தானுக்கும் அழைப்பு

இந்தியாவில் நடைபெறவிருக்கும் சர்வதேச திரைப்பட விழாவில் கலந்துகொள்ளுமாறு மக்கள் சீனத்திற்கும் பாகிஸ்தானுக்கும் இந்தியா அழைப்பு விடுத்துள்ளது. 1952 முதல் இந்தியாவில் நடைபெற்றுவரும் இவ்விழாவிற்கு முதல் முறையாக அவ்விரு நாடுகளுக்கும் அழைப்பு விடப்பட்டுள்ளது.

1975-ம் ஆண்டில் நடைபெற்ற இவ்விழாவானது 1977-ஜனவரி 3-ந்தேதி முதல் 16-ந் தேதி வரை நடைபெறவிருக்கிறது. இவ்விழாவில் 100 நாடுகள் கலந்து கொள்ளவிருக்கின்றன.

இரண்டாவது சர்வதேச திரைபடவிழா 1961-ல் நடைபெற்றது. 3-வது, 4-வது, 5-வது விழாக்கள் முறையே 1965, 1969, 1975 ஆகிய ஆண்டுகளில் நடைபெற்றன 1977 ஜனவரியில் நடைபெறவிருப்பது 6-வது விழாவாகும்.

சர்வதேச திரைப்பட விழாவின் போட்டியில் கலந்து கொள்வதற்காக 25 படங்கள் தேர்ந்தெடுக்கப்படும். அதற்கென 21 பேர் கொண்ட கமிட்டி அமைக்கப்பட்டுள்ளது. சிறந்தபடமென தீர்மானிப்பதற்கு 7 பேர்கொண்ட நீதிபதி குழு அமைக்கப்படும். இக்குழுவில் சர்வதேச திரைப்பட நிபுணர்கள் இருப்பார்கள். ஏழு பேரில்இருவர் இந்தியர்.

## இந்தியாவில் அன்னிய நாட்டு முதலீடு பற்றி ரிசர்வ் பேங்க் டைரெக்டர்

இந்திய—அமெரிக்க வர்த்தக சபையின் சார்பாக நடைபெற்ற கூட்டத்தில் ரிசர்வ் பேங்க் ஆஃப் இந்தியாவின் நிர்வாக டைரெக்டர் பேசுகையில் அன்னியக்கம்பெனிகள் இந்தியாவில் செயல்படுவதற்கு அன்னிய செலாவணி ஒழுங்குச்சட்டம் தடையாகஉள்ளது என்பதை மறுத்தார். மேலும், அவர் பேசுகையில், இந்தியாவில் 1800 கோடி ரூபாய்க்கு வெளிநாட்டு முதலீடு உள்ளது என்றும் அதில் 1200 கோடி ரூபாய் அன்னிய செலாவணி ஒழுங்குச் சட்டத்தின் சுற்று எல்லைக்கு வெளியில்தான் செயல்படுகின்றன என்றும் அவர் பேசினார்.

"டைம்ஸ் ஆப் இந்தியா" ஜூலை—31

# ஏ. பி. பழனிச்சாமியின் வாழ்க்கை வரலாறு

மதுரை மாவட்டம் திருமங்கலம் தாலுகா எருமார்பட்டி கிராமத்தில், ஒரு ஏழை விவசாயக் குடும்பத்தில் பிறந்தார். சிறுவயதில் களையெடுப்பது, ஆடு, மாடு பராமரித்தல் போன்ற வேலைகளைச் செய்து வந்தார். கிராமப் பள்ளியில் 3-வது வகுப்பு வரைதான் படிக்க முடிந்தது.

13-வது வயதில் மதுரைக்கு வந்து ஹார்வி மில்லில் ரோலிங் டிபார்ட்மெண்டில் வேலைக்குச் சேர்ந்தார்.

இரண்டாவது உலகப் போர் 1939-ல்தொடங்குவதற்குமுன் இவர் திரு. எஸ். ஆர். வரதராஜுலு நாயுடு தலைமையிலிருந்த மதுரை லேபர் யூனியன் (எம். எல். யூ) சங்கத்தில் தீவிர ஊழியரா்க இருந்தார்.

## கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தார்

1940—42-ம் ஆண்டுகளில் தலைமறைவாக இயங்கிய கம்யூனிஸ்ட் தலைவர்களுடன் தொடர்பு ஏற்பட்டு 1943-ம் ஆண்டில் கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தார். அப்போது ஹார்விமில் தொழிலாளர்கள் முதன் முதலாக போனஸ் கோரிக்கைக்காகப் போராட முன் வந்தனர். அப்போராட்டத்தின் முன்னணி ஊழியர்களாக விளங்கிய பழனிச்சாமி உள்ளிட்ட 7 பேர்களை அன்றைய அன்னிய ஆட்சி கைது செய்து 6 மாத கடுங்காவல் தண்டனை விதித்தது. தண்டனைக் காலத்தை ஆந்திராவிலுள்ள அலிப்புரம் சிறையில் கழித்தனர்.

தண்டனைக் காலம்முடிந்து விடுதலையாகி வந்தவர்களை, ஹார்வி மில் நிர்வாகம் வேலையில் சேர்த்துக்கொள்ளமறுத்து விட்டது.

1944-ம் ஆண்டில் மதுரை மில் தொழிலாளர்களின் நலனுக்காகப் பாடுபடுவதென்று, வர்க்க உணர்வோடு கூடிய மதுரை பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தை தோழர் பி. ராமமூர்த்தியை தலைவராகக் கொண்டு ஆரம்பிக்கப்பட்டபோது, தோழர் பழனிச்சாமி ஹார்வி மில் தொழிலாளர் வட்டாரத்தில் சிறந்த அமைப்பாளராகப் பணியாற்றினர்.

## சிறைவாசம்

கம்யூனிஸ்ட் கட்சியின் நகர்க் கமிட்டி செயலாளராகவும் பின்னர் மாவட்ட கமிட்டி செயலாளராகவும் சேவை செய்துவந்த பழனிச்சாமி 1949ம் ஆண்டில் பாதுகாப்புக் கைதியாக வேலூர் சிறையில் வைக்கப்பட்டார். 1951-ல் வேலூர் சிறையினின்றும் விடுதலையாகி வெளிவந்த சிறிது காலத்தில்— மீண்டும் கட்சி இயக்கத்தில் தீவிரப்பங்கு கொண்டார்.

1953-ல் மதுரை நகராட்சிக்கு நடந்த தேர்தலின்போது கூட்டணி கட்டுவதில் அழகரடி வார்டை விட்டுக் கொடுப்பது சம்பந்தமாக கடும் சிக்கல் ஏற்பட்டபோது, விட்டுக் கொடுப்பதினால் ஏற்படும் ஒற்றுமையையும் வெற்றிகளையும் உற்சாகத்தையும் பற்றி கட்சி அணிகள் அனைவருக்கும் விளக்கிக்கூறி, கருத்தை ஏற்கச்செய்த பழனிச்சாமியின் திறமையும் கூர்மதியும் தனிச் சிறப்பு வாய்ந்தவை. கூட்டணிவாக்குகள் பிளவுபடாமல் பாதுகாக்கப்பட்டதால் கம்யூனிஸ்ட் கட்சி 12 இடங்களில் வெற்றி பெற முடிந்தது.

## திருமணம்

1954 அக்டோபர் 10-ல் நாயுடு வகுப்பில் பிறந்த பழனிச்சாமி கிறிஸ்துவமதத்தைச் சார்ந்த வேதமணியை கலப்பு திருமணம் செய்து கொண்டார். இவருக்கு 4 பெண்குழந்தைகள், 3 ஆண் குழந்தைகளும் இருக்கிறார்கள். மூத்த பெண் பாத்திமா கல்லூரியில் பி.ஏ.வகுப்பில் படித்துக் கொண்டிருக்கிறார். பழனிச்சாமியின் துணைவியார் மாநகராட்சிப் பள்ளியில்ஆசிரியராக பணியாற்றி வருகிறார்.

தாய் தந்தையர் இல்லை. உடன்பிறந்த சகோதரர்கள் 3 பேர் உள்ளனர்.

## மீண்டும் கைதுகள்

1962ல்இந்திய-சீனஎல்லைத் தகராறின் போது பாதுகாப்பு கைதியாக கடலூர் சிறையில் அடைக்கப்பட்டு, 1 வருடம் கழித்து விடுவிக்கப்பட்டார்.

1964 டிசம்பர் கடைசியில் மீண்டும் பாதுகாப்பு கைதியாகப் பிடிக்கப்பட்டு, கடலூர் மத்திய சிறையில் வைக்கப்பட்டார். 1966 மத்தியில் விடுதலையடைந்து தொடர்ந்து கட்சிப் பணியில் மும்முரமாக ஈடுபட்டார்.

1973ல் விலைவாசி உயர்வை எதிர்த்து தமிழகம் முழுவதும் நடைபெற்ற தர்ணா போராட்டத்திற்கு பழனிச்சாமி மதுரையில் தலைமைதாங்கி 400 தோழர்களுடன் மதுரைசிறையில் வைக்கப்பட்டார்.

வர்க்க உணர்வும், கொள்கை உறுதியும் கொண்ட தோழர் ஏ. பி பழனிச்சாமி அனைவருடனும் இன்முகத்துடனும் நிறைந்த சிரிப்புடனும் பழகக்கூடியவர்.

இந்தியக் கம்யூனிஸ் கட்சி இயக்கத்துத் திருத்தல்வாதமும், அதி தீவிரவாதமும் தலை தூக்கிய சமயங்களில், மதுரை மாவட்டத்தில் அவ்விரு போக்குகளினால் கம்யூனிஸ்ட் கட்சி சிதைந்து போகாது சரியான வழியில் செல்ல தோழர் ஏ. பி பழனிச்சாமி ஆற்றிய பங்கு முக்கியமானதாகும்.

## மதுரை-முகவை மாவட்ட செயலாளராக

கடந்த 2 ஆண்டுகளாக மதுரை மாவட்டத்துக்கு மட்டுமின்றி இராமநாதபுரம் மாவட்ட கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்)கட்சி செயலாளராகவும், கட்சியின் மாநில செயற்குழுவிலும் உறுப்பினராகவும் இருந்து பணியாற்றினர்.

கடந்த 2 ஆண்டுகளாக தலைவலியால் பாதிக்கப்பட்டார்.

கட்சியின் மதுரை நகர்க் கமிட்டியும், மாவட்ட கமிட்டியும், மாநிலக் கமிட்டியும் இவரை பாண்டிச்சேரி மருத்துவ மனையிலும் மதுரை எர்ஸ்கின் மருத்துவ மனையிலும் வைத்திய சிகிச்சைக்கு ஏற்பாடு செய்தன,

## காலமானர்

இறுதியில் கடந்த 2 ஆண்டுகளாகவே தோழர் பழனிச்சாமியின் மூளையில் ''மோட்டார் நியூராண்'' என்ற வியாதி இருப்பதாக அறியவந்து தீவிர சிகிச்சைகளெல்லாம் செய்யப்பட்டன.

எர்ஸ்கின் மருத்துவமனையில் ஒன்றரை மாதகாலமாக இருக்கும்போது, அவரது தம்பி வைகுந்தமும், அக்காள்சீனியம்மாளும், பஞ்சாலை தொழிற் சங்க ஊழியர் தோழர் சின்னத்தேவரும் உடன் இருந்து கவனித்து வந்தனர்.

தலைவர்கள் இ. எம். எஸ். நம்பூதிரிபாட், பி. ராமமூர்த்தி, எம். ஆர். வெங்கட்ராமன், என். சங்கரய்யா மற்றும் ஏராளமான தோழர்களும் மருத்துவ மனைக்கு தினசரி சென்று பார்த்து வந்தனர்.

நோய் குணமாகாத நிலையில், கடந்த 13—8—76 வெள்ளி மாலை 6-15 மணியளவில் காலமானர்.

## ஏ. பி. பழனிச்சாமி மறைவு பி. ராமமூர்த்தி அனுதாபம்

புதுடில்லியிலிருந்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொலிட்பீரோ உறுப்பினரும், சி. ஐ. டி. யூ. வின் பொதுச் செயலாளருமான தோழர் பி. ராமமூர்த்தி, ஏ. பி. பழனிச்சாமியின் மறைவு குறித்து பின்வரும் தந்தியை அனுப்பியுள்ளார்;

''ஏ. பி. பழனிச்சாமியின் மறைவு செய்தி கேட்டதும், பெரிதும் அதிர்ச்சியுற்றேன். கம்யூனிஸ்ட் கட்சியின் சாதாரண அணியிலிருந்து தகுதியின் அடிப்படையிலும், தொழிலாளி வர்க்கத்தின்இலட்சியங்களுக்காக 30ஆண்டுகளாக முனைமுறியாமல்ஆற்றிய தொண்டின் விளைவாகவும் தலைமைப் பதவிக்கு உயர்ந்தார் தோழர். ஏ. பி. பி.

தோழர் ஏ. பி. பி. யின் மறைவின் மூலம், மதுரைத் தொழிலாளி வர்க்கமும் பொது மக்கள் அனைவரும் தங்களுக்காக அர்ப்பணித்துக்கொண்ட ஒரு இலட்சிய வீரனை இழந்து விட்டனர். கட்சியும் தனது மிகச் சிறந்த தலைவர்களில் ஒருவரை இழந்து விட்டது.

துயரத்தில் மூழ்கிக்கிடக்கும் அவரது துணைவியாருக்கும் குழந்தைகளுக்கும் எனது அனுதாபம்.

பி. ராமமூர்த்தி
புதுடெல்லி

## இ. எம். எஸ். அனுதாபம்

தோழர் ஏ. பி. பழனிச்சாமியின் மறைவு குறித்து துக்கம் தெரிவித்தும், அவரது குடும்பத்தாருக்கும், கட்சி தோழர்களுக்கும் அனுதாபம் தெரிவித்தும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொலிட்பீரோ உறுப்பினர் தோழர் இ, எம். எஸ் நம்பூதிரிபாத் திருவனந்தபுரத்திலிருந்து தந்தி அனுப்பியுள்ளார்.

## கே. ரமணி

தமிழக சி ஐ டி யூ சார்பிலும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்கியின் கோவை — நீலகிரி மாவட்டக்குழு சார்பிலும் தோழர் கே. ரமணி அனுப்பியுள்ள அனுதாபச் செய்தியில் தோழர் பழனிச்சாமி மரணமடைந்தார் என்ற செய்தி கேட்டு அதிர்ச்சியடைந்தேன், அவரது மறைவால் தமிழகத் தொழிலாளிவர்க்கம், குறிப்பாக மதுரைத் தொழிலாளி வர்க்கமும் மக்களும் சீரிய தன்னலமற்ற சிறந்த தலைவன் ஒருவனை இழந்துள்ளது. அவரது பிரிவால் துயருற்றிருக்கும் அவரதுகுடும்பத்தினர்களுக்கும் மற்றும்தோழர்களுக்கும் ஆழ்ந்த அனுதாபத்தைத்தெரிவித்து கொள்கிறேன் என்று குறிப்பிட்டுள்ளார்.

## கே. அனந்தநம்பியார்

இரயில்வே தொழிலாளர் தலைவர் தோழர் கே. அனந்தநம்பியார், கட்சியின் திருச்சி மாவட்டக்குழுசார்பிலும்சிஐடியூ சார்பிலும் விடுத்துள்ள அனுதாபச் செய்தியில், தமிழக தொழிலாளி வர்க்கம் தனது தலைவர்களில் ஒருவரை இழந்து விட்டது என்றும், 35 ஆண்டுகால அரசியல் வாழ்க்கையில் ஈடுபட்டிருந்த தோழர் ஒருவரை இழந்துவிட்டதாகவும், அவரது நினைவுக்கு அஞ்சலிசெலுத்துவதாகவும், அவரது இலட்சியப் பணியினை தொடர்ந்து நாம் செயலாற்றுவோம் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

### அறிவிப்பு

"இந்திய சுதந்திரப் போராட்ட வரலாறு" கட்டுரையின் தொடர்ச்சி அடுத்த இதழில் வெளிவரும்.

## தமிழகம் முழுவதும் செங்கொடி தாழ்த்தி அஞ்சலி

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழகத் தலைவர்களில் ஒருவரான தோழர் பழனிச்சாமியின் மறைவுக்கு அஞ்சலியும், அனுதாபமும் தெரிவிக்கும் பொருட்டு கட்சியின் மாநிலக்குழு அலுவலகத்திலும், சிஐடியூவின் மாநிலக் குழு அலுவலகத்திலும் செங்கொடிகள் அரைக் கம்பத்தில் பறக்க விடப்பட்டன. கட்சியின் வார இதழான 'தீக்கதிர்' அலுவலகததுக்கு — தோழர் பழனிச்சாமியின் இறுதி யாத்திரை நடந்த நாளான 14—8—76ந் தேதியன்று விடுமுறை விடப்பட்டது.

தோழர் பழனிச்சாமியின் மறைவுச் செய்தி தமிழகம் முழுவதும் உள்ள கட்சி அணிகளுக்கும், மத்தியக் கமிட்டிக்கும், முக்கிய தலைவர்களுக்கும் தெரிவிக்கப்பட்டது.

தமிழகம் முழுவதும்கட்சிக் கொடிகளும், சிஐடியூ, விவசாயிகள் சங்கக் கொடிகளும் மற்றும் வெகுஜன ஸ்தாபனங்களின் கொடிகளும் அரைக்கம்பத்தில் பறக்கவிடப்பட்டு அஞ்சலி செலுத்தப்பட்டது.

## சேலம்-தர்மபுரி

தோழர் பழனிச்சாமியின் மறைவுச் செய்தி கேட்டு மிகவும் வருத்தமும் துயரமும் அடைந்தோம என்றும் அவரது மறைவுக்கு மாட்டக் குழு சார்பில் அஞ்சலி செலுத்துகிறோம் என்றும் தந்தி மூலமும் கடிதம் மூலமும் தோழர் பி, தர்மலிங்கம் தெரிவித்துள்ளார்.

கட்சி மற்றும் சி.ஐ.டி.யூ. அலுவலகங்களில் செங்கொடிகள் அரைக் கம்பத்தில் பறக்க விடப்பட்டன.

## கம்பத்தில் இலக்கிய நிகழ்ச்சி

தமிழ்நாடு முற்போக்கு
எழுத்தாளர் சங்கத்தின்
உததமபாளையம் வட்டார
கிளையின் சார்பில்
22—8—76 ஞாயிறு
தேரடி நகரவைப் பள்ளியில்
ஏ. பி. துரைச்சாமி தலைமையில்
சிறப்பு சொற்பொழிவுகளும்
சி.கே.ராசுப்பிள்ளை தலைமையில்
பட்டிமன்றமும் நடைபெறும்.
புலவர்

**த.ச.இராசாமணி**
**அருணன்**
மேலாண்மை
**பொன்னுச்சாமி**
**சாலமன்பாப்பையா**
**புத்தூரான்**
மறறும பலா பங்கேற்கிறார்கள்

# கியூபா

# புதிய சமுதாயம் புதிய வாழ்க்கை

இன்றைய சோசலிச கியூபாவின் பிரதமரும், அந்நாட்டு கம்யூனிஸ்ட்கட்சியின் பொதுச் செயலாளருமான பிடல் காஸ்ட்ரோ அன்று அந்நாட்டு பிற்போக்கு கோட்டையின் மீது தாக்குதல் தொடுத்த புரட்சிப் படையின் தளபதியாக இருந்தார்.

1953 ஜூலை 26-ந் தேதி மொன்காடாகோட்டை மீது பிடல்காஸ்ட்ரோவின் தலைமையில் புரட்சி வீரர்கள் தாக்குதல் தொடுத்தனர். அவர்களின் எண்ணிக்கை குறைவாக இருந்த போதிலும். அத்தாக்குதலின் சக்தி ஈடு இணையற்றதாக அமைந்தது.

அத்தீப்பொறி நாடு முழுவதும் பரவியது. பாடிஸ்டா என்பவரின் தலைமையிலான பிற்போக்கு அரசாங்கம் முறியடிக்கப்பட்டது. 1957-ல் பாடிஸ்டாவின் அரசுக்கு முட்டுக்கட்டை கொடுத்துவந்த அமெரிக்காவின் ஆதிக்கத்திற்கும் முடிவு காணப்பட்டது.

சோசலிச கியூபா மலர்ந்தது; புதிய சமுதாயம்—சுரண்டலற்ற சமுதாயம்—நிறுவப்பட்டது. மக்களின்அடிப்படை பிரச்சினைகளை அடிப்படையாகக் கொண்ட பொருளாதார—சமூக, குறிக்கோள்களைக் கொண்டதொரு அமைப்பு அமைக்கப்பட்டது! இன்று அந்த அமைப்பைமென் மேலும் வளர்க்கும் பணியில் உறுதியாக்கும் பணியில்கியூபா மக்கள் ஒன்றுபட்டுள்ளனர்.

கியூபாவின் புரட்சி அந்நாட்டினை முற்றிலும் மாற்றி விட்டது. அம்மாற்றத்தின் அடிப்படையில் அந்நாடு வளர்ச்சியடைந்து கொண்டே செல்கிறது.

புரட்சிக்கு முன்பு அந்நாடு மிகவும் பின்தங்கிய விவசாய நாடு. தொழில்துறையில் மிகவும் பின்தங்கிய நாடு கொஞ்சநஞ்சமிருந்த தொழில்களும் அமெரிக்க முதலாளிகளால் நடத்தப்பட்டன. ஆனால், இன்று அந்நாட்டின் தேசிய உற்பத்தியில் தொழில்துறையின் உற்பத்தி 40சத வீதமாக உயர்ந்துள்ளது.

மிகக் குறுகிய காலத்தில் மின்சாரம் எஞ்சினியரிங், ரசாயனம், உலோகம் ஆகியவை சம்பந்தப்பட்ட தொழில்கள் வேகமாக வளர்ந்துள்ளன. இதன் தொடர்ச்சியாக அந்நாட்டில் தேசிய தொழில் நுணுக்கமும், பொருளாதார வளர்ச்சியும் அதிகரித்துள்ளது,

அந்நர்ட்டின் முக்கியத் தொழில் சீனி உற்பத்தி. சீனி உற்பத்தியே அந்நர்ட்டு பொருளாதாரத்தின் முதுகெலும்பாகும். 1971-ம் ஆண்டு 43லட்சம் டன் சீனி உற்பத்தி செய்யப்பட்டது. அவ்வருடத்திற்கு பிறகு கியூபா கடுமையான வறட்சியை சந்திக்க நேர்ந்த போதிலும் 1974—75ல் சீனி உற்பத்தியை 65லட்ச டன்னாக உயர்த்த முடிந்தது.

உழைப்பின் பலன் உழைப்போருக்கே என்ற அடிப்படையைக் கொண்டிருக்கும் அந்நாட்டு பொருளாதாரத்தின் முதுகெலும்பான சீனிஉற்பத்தி தொழில்கள் நவீன இயந்திரங்களால் நவீனப்படுத்தப்பட்டுள்ளன.

மேலும் கியூபா புரட்சிக்குப்பின்பு அந்நாட்டின் விவசாய நிலங்கள் இருமடங்காக்கப்பட்டுள்ளன.

சீனி உற்பத்திக்கு தேவையான கரும்பு தவிர்த்த ஏனைய விவசாயப்பொருட்களின் உற்பத்தி சராசரி 7 சதவீதம் அதிகரித்துள்ளன.

நாட்டின் மொத்தத் தேசிய உற்பத்தி சராசரி10சத வீதம் வேகத்தில் அதிகரித்துள்ளது.

அந்நாட்டின் விவசாயம் தொழில் உற்பத்தி அதிகரிக்கும்போதே அதன் பலன்கள் அந்நாட்டு மக்களின்வாழ்க்கை அமைப்பையும் தரத்தையும் மாற்றி மேம்படுத்தி வருகின்றன.

புரட்சிக்கு முந்திய கியூபாவில் இருந்த வேலையின்மை, நிறவெறிக் கொடுமைகள் பஞ்சம், கல்வியறிவின்மை, விபச்சாரம்போன்ற கொடுமைகள் முடிவாகவும் முற்றிலுமாகவும் ஒழிக்கப்பட்டன,

வயது அதிகரிப்பாலும், அங்கஹீனத்தாலும், விபத்துக்களாலும் வேலை செய்ய முடியாத நிலையில் உள்ளவர்களை சமுதாயமே காப்பாற்றுகிறது. சமூக பாதுகாப்பு நடவடிக்கைகளின் மூலம் அவர்கள் பாதுகாக்கப்பட்டு பராமரிக்கப்படுகிறார்கள்.

1958-ம் ஆண்டில் பள்ளிகளில் படித்துக் கொண்டிருந்த மாணவர்களின் எண்ணிக்கை 8லட்சத்து 11ஆயிரம்தான். ஆனால் இன்று அவர்களின் எண்ணிக்கை 30லட்சமாக உயர்ந்துள்ளது.

அனைத்து குழந்தைகளும் கல்வி கற்கவேண்டும், அனைத்து குழந்தைகளுக்கும் இலவசக் கல்வி என்பது சோசலிச கியூபாவின் கல்வித்துறையின் அடிப்படைக் கொள்கையாகும்.

மேலும், தொழிலாளி வர்க்க சர்வாதிகாரத்தை மேலும் உறுதிப்படுத்துமவகையில் கடந்த பிப்ரவரியில் புதிய அரசியல் சட்டம் அமுலுக்கு வந்துள்ளது. இது கடந்தகால அனுபவங்களையெல்லாம்கணக்கில் கொண்டு மார்க்சிஸ—லெனினிஸ அடிப்படையில் தயாரிக்கப்பட்டதாகும்.

அப்புதிய அரசியல்சட்டத்தின் அடிப்படையில்தான் இன்று கியூபா தனது பாய்ச்சல் வேக முன்னேற்றத்தைக் கொண்டுள்ளது.

## போலீஸ் தொடுத்த வழக்கில் மார்க்சிஸ்ட் தோழர் விடுதலை

அவதூறாக பேசியதாக குற்றம்சாட்டி கடந்த9—8—75ந் தேதியன்று நெல்லை வாலிபர் முன்னணியின் உதவித் தலைவரும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினருமான தோழர் எஸ சக்திமீதுபோலீஸ் தொடுத்திருந்த வழக்குதள்ளுபடி செய்யப்பட்டது. தோழர் சக்தி விடுதலைசெய்யப்பட்டார்.

# கூட்டுச்சேரா நாடுகளின் மாநாடு

எந்தவொரு ராணுவக் கூட்டிலும் சேராத, வளர்ச்சியடையும் நாடுகளின் ஸ்தாபனமே கூட்டுச்சேரா நாடுகளின் ஸ்தாபனம். இதன் 5-வது மாநாடு இலங்கைத் தலைநகர் கொழும்பில் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

பல்வேறு சமுதாயஅமைப்புகளையும் அரசுகளையும் கொண்ட இந்த அமைப்பு சரியாக 15 வருடங்களுக்கு முன்பு அமைக்கப்பட்டதாகும். இதன் மூலகர்த்தாக்கள் இந்தியாவின் முன்னாள் பிரதமர் ஜவஹர்லால் நேரு யூகோஸ்லேவியாவின் ஜனாதிபதி டிட்டோ, எகிப்தின் முன்னாள் அதிபர் நாசர் ஆகியோராவர்.

ஆரம்பத்தில் — 1961 ஜூலையில் கூட்டுச்சேரா நாடுகளின் மாநாடு யூகோஸ்லேவியாவில் ஆரம்பிக்கப்பட்டபோது—இதில் உறுப்பினராக 15 நாடுகள்தான் இருந்தன. இன்று 85 நாடுகள் கொண்ட ஒரு முக்கிய சர்வதேச அமைப்பாக வளர்ந்துள்ளது.

நேடோ, சீடோ, வார்சா போன்ற ராணுவக்கூட்டுகளில் சேராத நாடுகளேஇந்தஅமைப்பில்உறுப்பினராக முடியும் என்பதே இந்த அமைப்பின் முக்கியமான அம்சம்.

ஆனால், இன்று பல்வேறு ராணுவக் கூட்டுகளில் சேர்ந்துள்ள நாடுகள் இந்த அமைப்பிற்குள்முழு உறுப்பினாகளாக செல்வதற்கு அதன் கதவுகளை தட்டிக் கொண்டிருக்கின்றன. இது இந்த அமைப்புக்கு ஏற்பட்டுள்ளதொரு பிரச்சினையாகும்.

ராணுவக் கூட்டில் சேர்ந்துள்ள நாடுகள் இந்த அமைப்பிற்குள் சேர்க்கப்படக்கூடாது என பெல்கிரேடில் நடைபெற்ற முதல் மாநாட்டில் கண்டிப்பாக வகுக்கப்பட்ட கொள்கையாகும்.

எனவே, அவ்விதமான நாடுகள் மாநாட்டின் பார்வையாளராகவோ, பிரதிநிதியாகவோ ஏற்றுக்கொள்ளப்படவில்லை.

ஆனால், கூட்டுச்சேரா நாடுகளின் அமைப்பில் சேர விரும்பும் நாடுகள் தங்களுடைய ராணுவக் கூட்டிலிருந்து விலகி இந்த அமைப்பிற்குள் வருவதை ஊக்கப்படுத்த வேண்டும் என்ற கருத்து அந்நாடுகளிடையே பொதுவாக உள்ளது, ஆனால், இப்பிரச்சினையானது, இதுவரைநடந்த மாநாடுகளில் விவாதிக்கப்படவில்லை.

இந்த அமைப்பின் முதல் மாநாடு 1961-ல் யூகோஸ்லேவியாவின் தலைநகர் பெல்கிரேடில் நடைபெற்றது, 2-வது மாநாடு எகிப்தின் தலைநகர் கெய்ரோவிலும் 3-வதுமாநாடு ஜாம்பியாவின் தலைநகர் லுசாகாவிலும் 4-வது மாநாடு அல்ஜீரியா நாட்டு தலைநகர் லிமாவிலும் நடைபெற்றன.

இலங்கைத் தலைநகர் கொழும்புவில் நடைபெறும் 5-வது மாநாடு முதல் தடவையாக ஆசியாவில் நடைபெறுவதாகும்,

கூட்டு சேரா நாடுகளில் அதிக எண்ணிக்கை உறுப்பினர்களாக இருப்பது ஆப்ரிக்க நாடுகளாகும். அதற்கு அடுத்த எண்ணிக்கையை கொண்டிருப்பது ஆசியாவாகும். மேலும் ஐரோப்பிய நாடுகளும் லத்தீன் அமெரிக்க நாடுகளும் உள்ளன.

அரசு அமைப்பு இல்லாத பாலஸ்தீன விடுதலை இயக்கமும் இந்த அமைப்பில் ஒரு உறுப்பினராகும்,

இவைதவிர இம்மாநாட்டில் 10 நாடுகளும் அரசு அமைப்பு இல்லாத ஸ்தாபனங்கள் 12-ம் பார்வையாளர்களாக கலந்துகொள்கின்றன. பார்வையாளர்களாக கலந்துகொள்ளும் நாடுகளும் ஸ்தாபனங்களும் மாநாட்டின் விவாதத்திலோ வோட்டெடுப்பிலோ கலந்துகொள்ள முடியாது.

இது தவிர, ஆஸ்திரியா பின்லாந்து, ஸ்வீடன், ஸ்விட்ஜர்லாந்து, ருமேனியா, போர்த்துக்கல், பிலிப்பைன்ஸ் ஆகிய 7 நாடுகள் விருந்தாளி நாடுகளாக கலந்துகொண்டன. அதாவது. மாநாட்டின் ஆரம்பத்தில் மட்டும்தான் பங்குகொள்ள முடியும்.

கூட்டுச்சேரா நாடுகளின் 5-வது மாநாட்டின் முக்கிய அம்சங்களில் ஒன்று, அமெரிக்க ஆக்கிரமிப்பிலிருந்தும் உள்நாட்டுப் பிற்போக்குவாதிகளிடமிருந்தும், புதிதாக விடுதலை பெற்ற வியட்னாம், கம்போடியா, லாவோஸ் ஆகிய நாடுகளின் தலைவர்கள் பங்கு கொண்டதாகும். அம்மாநாட்டில் கலந்து கொண்ட அனைத்து நாட்டு தலைவர்களும், வியட்னாம் சார்பாக கலந்துகொண்ட பிரதமர் பாம்வான்டாங், கம்போடிய ஜனாதிபதிகியூசம்பன். லாவோஸ் ஜனாதிபதி சௌபானுவாங் ஆகியோருடன் கைகுலுக்கி பாராட்டும்வாழ்த்தும் தெரிவித்தனர்;

இந்திய பிரதமர் இந்திரா காந்தி ஆகஸ்ட் 16-ந்தேதி காலை மாநாடு ஆரம்பமாவதற்கு இரண்டுமணி நேரத்திற்கு முன்பு இலங்கைத் தலைநகர் கொழும்பிற்கு வந்தார். விமான நிலையத்தில் அவருக்கு பெரும் வரவேற்பு அளிக்கப்பட்டது.

உலகப் பொருளாதாரத்தில் வளர்ச்சி அடையும் நாடுகளுக்குரிய பங்கை அந்நாடுகள் அடைய வேண்டும்; வளர்ச்சி அடைந்த நாடுகளை சார்ந்து இருக்கும் நிலை தவிர்க்கப்பட வேண்டும், ஏற்றுமதி இறக்குமதி வியாபாரங்களின் மூலமும். ஏனைய பொருளாதார நடவடிக்கைகளின் மூலமும் வளர்ச்சியடைந்த நாடுகள், வளர்ச்சியடையும் நாடுகளைச் சுரண்டுவது நிறுத்தப்படவேண்டும் ஆகியவைகள் கோஷ்டிசேரா நாடுகளின் அமைப்பால் அறிவிக்கப்பட்ட முக்கிய கொள்கைகளாகும்.

இந்த நோக்கின் ஒரு அம்சமாகவே வளர்ச்சி அடையும் நாடுகளுக்கென தனி செய்தி ஸ்தாபனம்அமைப்பு அமைப்பதென டெல்லியில் கூடி முடிவு செய்யப்பட்டதாகும்,

மேலும் காலனியாதிக்கம் நிறவெறி ஆதிக்கம் ஆகியவற்றிற்கு எதிரான போராட்டங்களுக்கு ஆதரவளிப்பதும் இந்த அமைப்பின் கொள்கையென வலியுறுத்தப்பட்டு வருகிறது.

# வெளிநாட்டுச் செய்திகள்

## போர்த்துக்கல்

தப்பியோடிய ஸ்பினோலோ என்னும் முன்னாள் ராணுவ ஜெனரல் மீண்டும் போர்த்துக்கல் திரும்பியுள்ளார்.

சர்வாதிகாரி சலாசரின் ஆட்சியை இடதுசாரி ராணுவத்தினர் தூக்கியெறிந்தபின போர்த்துக்கல் நாட்டின் அதிபராக ராணுவ ஜெனரல் ஸ்பினோலோ எனபவர் வந்தார். பினபு, இடதுசாரி ராணுவத்தினருக்கெதிராக செயலபட்ட காரணத்தால் ஸ்பினோலோ கைது செய்யப்படவிருந்த போது, போர்த்துக்கலிலிருந்து தப்பியோடி விட்டார். சுமார் 18 மாதங்கள் வெளி நாடுகளில் இருந்த ஸ்பினோலோ மீண்டும் போர்த்துக்கலுக்குத் திரும்பியுள்ளார்.

சமீபத்தில் போர்த்துக்கலில் தேர்தல் நடைபெற்று சோசலிஸ்ட் கட்சியின் தலைமையில அரசாங்கம் அமைக்கப்பட்டுள்ளது. இந்த அரசாங்கம் அவரை உள்ளேவர அனுமதித்தது. ஆகஸ்ட் 10-ந்தேதி போர்த்துக்கலின் தலைநகரான லிஸ்பனுக்குவந்த ஸ்பினோலோ உடனடியாக போலீஸ் வேன் மூலம் கொண்டுசெல்லப்பட்டார். அவர்மீது விசாரணை நடத்தப்படும் என போர்த்துக்கல் அரசாங்கம் அறிவித்துள்ளது. முதலில் லிஸ்பனுக்கு வெளியில உள்ள சிறையில் அடைக்கப்பட்டார். பின்பு, சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டார். ஆனால், விசாரணை இருக்கும் என கூறப்பட்டுள்ளது.

## ஆஸ்திரேலியா

இந்துமா கடலில் அமெரிக்கா அமைத்துக் கொண்டிருக்கும் டியாகோ கார்சியா தீவு கடற்படை தளமானது உபயோகத்துக்குத் தயாராகி விட்டது என்று 'ஆஸ்திரேலியன்' என்ற செய்தி பத்திரிகை இராணுவக் கூட்டுத் தலைமை அறிவித்துள்ளதாக ஒருசெய்தி வெளியிட்டுள்ளது.

## சோவியத் யூனியன்

அரபு நாடுகளிலுள்ள வலதுசாரிசக்திகளுக்கு சோவியத் யூனியன் எச்சரிக்கை விடுத்துள்ளது. 'அரசியல், பொருளாதார துறைகளில் ஏகாதிபத்தியத்துக்கு விட்டுக் கொடுத்து அரபு நாடுகள் சமாதானத்தைப் பெறலாமென்று கருதினால், தேசியத் துறையிலும், சமுதாயத்துறையிலும் அரபு நாடுகள் பெற்றுள்ள நன்மைகளை இழக்க நேரிடும்'என்று எச்சரித்தது.

## ரொடிசியா

5 லட்சத்திற்கும் அதிகமான கறுப்பு தொழிலாளர்கள் வெள்ளை முதலாளிகளுக்கு அடிமைகளாக உள்ளனர் என சர்வதேச நீதிபதிகள் கமிஷன் குற்றஞ்சாட்டியுள்ளது. மேலும் அத்தொழிலாளர்கள் அவர்களுடைய வேலையிலிருந்து விலகிக்கொள்வதற்கு அனுமதிக்கப்படுவதில்லை. இக்கொடும் கட்டுப்பாடுகளை மீறி வேலையிலிருந்து தாமாக விலகிக்கொள்ளும் தொழிலாளர்கள் அபராதத்திற்கும் சிறை தண்டனைக்கும் உள்ளாகிறார்கள் என்றும் அக்கமிஷன் குற்றஞ்சாட்டியுள்ளது.

சிறைத் தண்டனைக்குப் பிறகு அதே வெள்ளை முதலாளியிடம் வேலைக்குச் சேராவிட்டால் அக்கறுப்பு தொழிலாளி மீண்டும் அதனை ஒப்புக்கொள்ளும் வரை தண்டனை விதிக்கப்படுகிறது என்றும் அக்கமிஷன் குறிப்பிட்டுள்ளது. வீட்டுவேலைகளிலும் சுரங்கங்களிலும் ஈடுபட்டுள்ள கறுப்புத் தொழிலாளர்கள் 75 வயதுவரையிலும் வேலைவாங்கப்படுகின்றனர் என்றும் அக்கமிஷன் குறிப்பிட்டுள்ளது.

## தென் ஆப்ரிக்கா

தென் ஆப்ரிக்காவில்வெள்ளையர்கள் வாழும் பகுதி, கறுப்பர்கள் வாழும் பகுதி என புதிதாக பிரிக்கும் வேலை நடைபெறுவதையொட்டி அந்நாட்டின் தலைநகரான ஜோஹன்ஸ்பர்க்கில், இந்திய வியாபாரிகள் ஆயிரக்கணக்கில் மாற்றுஇடத்திற்கு விரட்டப்பட்டனர். இதனை இந்திய வியாபாரிகள் கண்டனம தெரிவித்து எதிர்த்தனர். எனினும், அவர்களது கண்டனம் அலட்சியம் செய்யப்பட்டது. இந்நடவடிக்கையால் 7 லட்சத்து 50 ஆயிரம் இந்தியர்கள் பாதிக்கப்பட்டுள்ளனர், போலீசாரின் பலாத்கார நடவடிக்கைகளால் ஆயிரக்கணக்கான இந்தியர்கள் அவர்களுடைய வீடுகளிலிருந்தும் தொழில்களிலிருந்தும் விரட்டப்பட்டனர். இதனால் அவர்கள் கடுமையாக பொருளாதாரரீதியாக பாதிக்கப்பட்டுள்ளனர்.

# தமிழக வறட்சி பற்றி ஆராய மற்றொரு குழு

## மத்திய அமைச்சர் தகவல்

தமிழகத்தில் ஏற்பட்டுள்ள வறட்சி நிலைமைகளைப் பற்றி மதிப்பிட மற்றொரு ஆய்வுக் குழு தமிழ்நாட்டுக்கு விரைவில் செல்லும் என்று மத்திய விவசாயத்துறை அமைச்சர் திரு ஏ பி சிண்டே மாநிலங்கள் அவையில் கூறினர்.

வறட்சியைச் சமாளிக்க கூடுதலாக 18.02 கோடி ரூபாய் தேவை என்று தமிழக அரசு கடந்த ஏப்ரலில் ஒரு மதிப்பீடு அனுப்பி வைத்திருந்ததாக கூறிய அமைச்சர் சிண்டே, மத்திய அரசு அனுப்பி வைத்த முதல் குழுவின் பரிந்துரையின் படி திட்ட உதவியாக ரூ7.5 கோடி அளிக்கப்பட்டது என்றும் குறிப்பிட்டார்.

# கோபி ஆர்டிஓ விடம் வாலிபர் முன்னணி சார்பில் மகஜர்

பவானிதாலுகா தளவாய்ப்பேட்டையில் அரசு உயர்நிலைப் பள்ளி துவக்க விழாவிற்கு கடந்த 13—7—76-ந்தேதி வருகைதந்த கோபி கோட்ட ஆட்சித் தலைவர், பவானி வட்டாட்சியர் ஆகியோரிடம் பவானிகிளை சோசலிஸ்ட்வாலிபர் முன்னணி சார்பில் கோரிக்கை மகஜர் ஒன்று அளிக்கப்பட்டது.

அதில், விலைவாசி பற்றியும், நெசவுத் தொழிலுக்குத் தேவையான பாவு, நூல கட்டு விலைகள் பற்றியும் கூறப்பட்டிருந்தன.

கிராமப்புற வளர்ச்சிக்கான திட்டங்களை அதிகப்படுத்துவதின்மூலம கிராமப்புறங்களில் வேலைவாய்ப்புக்களை விரைந்து அதிகரிக்க வேண்டும் என்றும், வேலைவாய்ப்பு அல்லது வேலையின்மைக் கால நிவாரணம் அளித்தல், அரசு மருத்துவ மனையில் மருந்துகள், ஊசி மருந்துகளை அதிகப்படுத்துதல் ஆகிய கோரிக்கைகளும் வலியுறுத்தப்பட்டிருந்தன.

வாலிபர் முன்னணி கிளைச் செயலாளர் வி. நடராஜன், துணைச்செயலாளர் கே. ஏகாம்பரம், பூபாலன் ஆகியோர் இம் மகஜரை அளித்தனர்.

# நடத்திய சோதனையும் பிடிபட்ட தங்கத்தின் மதிப்பும்

ஆகஸ்ட் 6ல் நாடாளுமன்ற ஆலோசனை கமிட்டியில் பேசிய இந்திய வருவாய் இலாகா அமைச்சர் பிரணப் முகர்ஜி, தங்கபதுக்கல்சோதனைகள் நடத்தியது பற்றியும் பிடிபட்ட தங்கத்தின் மதிப்பு பற்றியும் தெரிவித்தார்.

அதன்படி 1974ல் 49555 சோதனைகள் நடத்தப்பட்டன. அவ்வருடம் பிடிபட்ட தங்கத்தின் மதிப்பு 60கோடிரூபாய். 1975ல் 64549 சோதனைகள் நடத்தப்பட்டன. பிடிபட்ட தங்கத்தின் மதிப்பு 45கோடிரூபாய் 1976ல் ஜூலை மாதம்வரை 35510 சோதனைகள் நடத்தப்பட்டன. பிடிபட்ட சொத்தின் மதிப்பு 12கோடியே 71லட்ச ரூபாய்.

# தொழில் அதிபர்களின் கட்டுப்பாடு

கணிசமான அளவுக்கு லே-ஆப்களும், ஆட்குறைப்புகளும், ஆலை மூடல்களும் இன்னும் நடந்துகொண்டிருப்பதால் "தொழில் அதிபர்களை அரசாங்கம கட்டுப்படுத்தவேண்டும்" என்று கடந்த ஜூலை 27-ல் டில்லியில் கூடிய ஐ என் டி யூ சியின காரியக்கமிட்டி கேட்டுக் கொண்டது.

—இந்துஸ்தான் டைம்ஸ் ஜூலை 27

# இரானுக்கு ஆயுதம் அமெரிக்காவின் சப்ளை

அமெரிக்காவிடமிருந்து இவ்வருடம் 300 கோடி டாலர் (2700 கோடி ரூபாய்) மதிப்புள்ள ஆயுதங்களை வாங்க இரான் தீர்மானித்துள்ளது. அமெரிக்காவிடமிருந்து வாங்கப்படும் ஆயுதங்களுக்கு பதில் எண்ணெய் சப்ளை செய்யப்படக்கூடும்.

கடந்த 4 வருடங்களில்மட்டும் அமெரிக்காவிடமிருந்து இரான் 1000 கோடி டாலர் (8000 கோடி ரூபாய்) மதிப்புள்ள ஆயுதங்களை வாங்கி இருக்கிறது. இதனை இரான் மன்னர் ஷா, நிருபர்களிடம் தெரிவித்தார்.

வாங்கப்படும் ஆயுதங்களுக்கு பரிவர்த்தனையாக அமெரிக்காவுக்கு 1300 கோடிடாலர் (11,760 கோடி ரூபாய்) மதிப்புள்ள கச்சா எண்ணெயை விற்பது என்பது இருநாடுகளுக்கு மிடையேயான பேச்சுவார்த்தையில் உள்ளது என்றும் அப்பேச்சுவார்த்தை வெற்றிகரமாகமுடிய வேண்டுமென்பதில் தான் மிகுந்த சிரத்தை கொண்டுள்ளதாகவும் அவர் கூறினர்.

இரானுக்கு தொடர்ச்சியாக ஆயுத சப்ளை செய்துவரும் அமெரிக்காவின் வெளிநாட்டுக் காரியதரிசி கிசிங்கர், இரான் ஆயுத பலத்தால் பலப்படுத்தப்படுவது அவசியம் என்று கூறியுள்ளார்.

## சோவியத்தின் கண்டனம்

இரான், சௌதி அரேபியா போன்ற எண்ணெய்வள நாடுகளுக்கு அமெரிக்கா ஆயுத விற்பனையை அதிகரிப்பதன் மூலம் அப்பகுதியில் ஆயுதப் போட்டியை அதிகரிக்கிறது என்றும் அப்பகுதியில் உள்ள நாடுகளின் பாதுகாப்பிற்கு மிரட்டல் விடுகிறது என்றும் சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட்கட்சி பத்திரிகையான பிராவ்தா கண்டனம் தெரிவித்துள்ளது.

மேலும், அமெரிக்காவிற்கான எண்ணெயைப்பெறுவதற்காக எண்ணெய்வள நாடுகளில் ஆயுத விற்பனையைப் பெருக்கி அந்நாடுகளை தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக்கொள்ள முயற்சிக்கிறது என்றும் அப்பத்திரிகை குற்றஞ்சாட்டியுள்ளது.

# பரமக்குடியில் எழுத்தாளர் சங்க சார்பில் இலக்கிய விழா

முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் பரமக்குடி கிளை கடந்த 8—8—76ஆம் நாள் ஞாயிறன்று சிறப்புமிகு இலக்கிய விழாவை நடத்தியது.

தற்காலத் தமிழ் இலக்கியத்தில் காணப்படும் கொச்சையான ரசனைகள் குறிவைத்து தாக்கப்பட வேண்டுமென்ற கே. முத்தையாவின் முழக்கத்தோடு காலை 11 மணிக்கு கருத்தரங்கு தொடங்கியது.

'கவிதை யாருக்காக?' என்ற தலைப்பில் இளவேனிலும் 'நாவல் இலக்கியம்' என்ற தலைப்பில் பரமசிவமும், 'நாடகமும் சமுதாயப் பார்வையும்' என்ற தலைப்பில் இராமானுஜமும், 'இன்றையத் திரைப்படங்கள்' என்ற தலைப்பில் மேலாண்மை பொன்னுச்சாமியும் சொற்பொழிவாற்றினர்கள்.

பிற்பகல் 4-30 மணிக்கு மக்கள் அரங்கம் நடைபெற்றது. தலைமை தாங்கிய இளவேனில் இந்நிகழ்ச்சியை 'சங்கப் பலகை' என்று வர்ணனை செய்தார், 13 புதிய படைப்பாளிகள் பங்கேற்றனர்.

இரவு 7-30 மணிக்கு கவிஞர் தணிகைச் செல்வன் தலைமையில் கவியரங்கம் நடைபெற்றது. 'புதிய சமுதாயம் அமைப்போம் வாரீர்' என்ற தலைப்பில் கவிஞர் தணிகை புரட்சிகீதம் இசைத்தும், கவிஞர்கள் கவிதாஞ்சலி செய்து வரவேற்றதும் கம்பீரமாய் இருந்தது.

புதிய சமுதயாம் அமைக்க 'மாதர்களே வாரீர்'என்ற தலைப்பில் மாவேந்தனும், 'மாணவர்களே வாரீர்' என்ற தலைப்பில் செம்சனும், 'நடுத்தர வகுப்பினரே வாரீர்'என்ற தலைப்பில் அறிவனும், 'எழுத்தாளர்களே வாரீர்' என்ற தலைப்பில் பொன்முதல்வனும், 'விவசாயிகளே வாரீர்' என்ற தலைப்பில் இளவேனிலும், 'தொழிலாளர்களே வாரீர்' என்ற தலைப்பில் ஏ. தே. சுப்பையனும் கவிதை படித்தார்கள்.

இரவு 9 மணிக்கு யர் மைதிலிசிவராமன் 'பெண்கள் விடுதலைக்கு இலக்கியத்தின் பங்கு என்ன?' என்ற தலைப்பில் சிறப்பு சொற்பொழிவாற்றினர்கள். ஏராளமான பொதுமக்கள் கலந்து கொண்டார்கள்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில் "தீக்கதிர்" அச்சகத்தில் [6/16 பைபாஸ் ரோடு மதுரை 625018] அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் எம். ஆர். வெங்கட்ராமன்.

# ராஜேஸ்வரராவுக்கு பசவபுன்னையா பதில்

இந்தியக்கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)யின் தலைவர்களுக்கும் வலது கம்யூனிஸ்ட் கட்சி தலைவர்களுக்குமிடையே பேச்சு வார்த்தை நடந்ததையொட்டி இருகட்சிகளும்ஒன்றுபடுவதற்கோ கூட்டணி அமைக்கவோ சாத்தியம் உள்ளது என்பதை இந்திய கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்)யின் பொலிட்பீரோ உறுப்பினர் பசவபுன்னையா நிராகரித்தார்.

வலது கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச்செயலாளர் ராஜேஸ்வரராவ் வெளியிட்டுள்ள அறிக்கைக்கு மறுப்பு அளித்து வெளியிட்டுள்ள அறிக்கையில் தோழர் பசவபுன்னையா மேற்கண்டவாறு தெரிவித்துள்ளார்.

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின சார்பான இ எம் எஸ் நம்பூதிரிபாட், பசவபுன்னையாவுக்கும வலது கம்யூனிஸ்ட் கட்சி சார்பான ராஜேஸ்வரராவுக்குமிடையே நடைபெற்ற பேச்சுவார்த்தைகளானது பூர்வாங்கமானதும், ஆய்வுத்தன்மை கொண்டதும் மட்டுமேயாகும் என்றும் தோழர் ப்சவபுன்னையா குறிப்பிட்டுள்ளார்.

அவர் மேலும் தனது அறிக்கையில் கூறியுள்ளதாவது:—

இரு கட்சிகளையும் ஒன்ருக கொண்டு வரவேண்டும் என்பதில் அக்கறை கொண்ட சில பொது நண்பர்களால் எடுக்கப்பட்ட முன் முயற்சியால் இப்பேச்சு வார்த்தைகள் நடைபெற்றன. இரு கட்சிகளுக்குமிடையேயான ஒற்றுமையையோ, கூட்டணியையோ செய்து முடித்திட வேண்டும் என அவர்கள் (பொது நண்பர்கள்) கொஞ்சங்கூட எண்ணியதில்லை.ஏனென்ருல் இரு கட்சிகளும் அடிப்படையாகவே வேறுபட்ட அரசியல் தத்துவார்த்த கொள்கைகளை கடைப்பிடிக்கின்றன.

இரு கட்சிகளுக்குமிடையே ஒற்றுமையோ கூட்டணியோ என்பது நினைத்துக்கூட ப்பார்க்க முடியாதது என்பதை இரு கொள்கைகளும் கொண்டுள்ளன.

## மறு உறுதி

பொதுமக்களுக்கானவெகுஜனப் பிரச்சினையில் அல்லது வர்க்கப் பிரச்சினையில் கூட்டு நடவடிக்கைக்கான சாத்தியப்பாட்டை கண்டுபிடிக்கும்நோக்குடன் இருகட்சிகளும் ஒன்றுக்கொன்று புரிந்துகொள்வதும் ஆராய்வதுமே பேச்சுவார்த்தைக்குப் பின்னல் உள்ள உண்மையான புறநிலைக்குறிக்கோள் அப்புறநிலைக்குறிக்கோள்கூட ஆழமாக விவாதிக்கப்படவில்லை நடந்தது என்னவென்ருல், சில பிரச்சினைகள் மீது ஏற்கெனவே இருகட்சிகளின் நிலைகள்பற்றி ஒருவருக்கொருவர் தெரிந்திருந்தவை மீது பொதுவாக ஆராயப்பட்டதுதான். இவ்வாறுதோழர் பசவபுன்னையா தனது அறிக்கையில் கூறினர்.

மேலும், அவர், வலது கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளர் ராஜேஸ்வரராவின் அறிக்கைபற்றி கூறுகையில், அந்த அறிக்கையில், உள்ள உணர்ச்சிகளும், தொனிகளும், எழுத்தின்போக்கும் காட்டுவதென்னவென்ருல் இருகட்சி தலைவர்களுக்கும் இடையேயான பேச்சு வார்த்தை, அதன் விளைவான பயனுள்ள முடிவு ஆகியவைகளைக் காட்டிலும் ஆளுங்காங்கிரஸ் கட்சியோடுதன்னுடைய கட்சி கூட்டு வைத்துக் கொள்வதுபற்றியே ஆவலாக இருப்பதை ஆளுங்காங்கிரசுக்கு மறுஉறுதி அளிப்பதில்தான் வலது கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச்செயலாளர் ஆவலாக இருக்கிருர் என்பதே என்று கூறியுள்ளார்.

அவர் தொடர்ந்து கூறுவதாவது:

தேசபக்த சக்திகளும், முற்போக்கு சக்திகளும் குறிப்பாக, வலது கம்யூனிஸ்ட் கட்சியும், காங்கிரஸ் கட்சியும் ஒன்றுபடுவது பற்றி நம்பூதிரிபாடும் அவரது சகதோழர்களும் பீதி அடைந்துள்ளனர் என்றும் அவர்கள் (மாாக்சிஸ்ட் கட்சியினர்) இந்த ஒற்றுமையை உடைக்க வேண்டுமென விரும்புகிருர்கள்; இந்தப் பிரச்சினையில் பிற்போக்கு சக்திகளும் முற்போக்கு எதிர்ப்பு சக்திகளும் கொண்டிருக்கும் நிலைபாட்டையே மார்க்சிஸ்ட் கட்சியினரும் கொண்டுள்ளனர் என்றும்ராஜேஸ்வரராவ் அறிக்கை வெளியிட்டுள்ளார். இந்த அறிக்கையிலிருந்து நாம் என்ன முடிவுக்கு வரமுடியும்? ஒரு உண்மையான மனைவிதன்னுடைய கணவனுடையகாதிற்குள். தன்னைக் கடத்திச்செல்ல சிலர் வெளியே இருப்பதாக பலமாக கத்தமாட்டாள்.

## பிரச்னையில் பின்னடைவு

காங்கிரஸ் கட்சியுடன் பிரயாணம் செய்வது அல்லது மூழ்குவது என்பதற்கு மதிப்பளிபபதற்கும் அல்லது அதனை உடைப்பதற்கும் வலது கம்யூனிஸ்டுகளுக்கு முதல் உரிமை உள்ளது. ஆனல்,காங்கிரஸ்—வலது கம்யூனிஸட் கட்சி ஒப்பந்தத்தை காப்பாற்றுவதில் இந்தியக் கம்யூனிஸட் கட்சி (மார்க்சிஸட், மீது சேற்றை வாரி இறைக்கும் நுணுக்கத்தை கையாள்வதும் நடைமுறைப்படுத்துவதும் வெளிப்படையாகவே மோசமான ஆர்வமாகும்.

மார்க்சிஸ்ட் கட்சியுடன் தன்னுடைய கட்சி எந்தவொரு கூட்டு நடவடிக்கை எடுத்தாலும் அது வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கும். காங்கிரஸ் அரசாங்கத்துக்குமிடையே உருவாகியுள்ள "பெரும் உடன்பாட்டை" உடைத்துவிடக்கூடும் என தன் கட்சித் தலைவர்கள் பயப்படுவதாக ராஜேஸ்வரராவ் வெளிப்படையாக,கூறிவிட்லாம். மாருக, வர்க்க, வெகுஜன பிரச்னைகளின் மீது 'பிற்போக்கு கட்சிகள்' உட்பட அனைத்துக் கட்சிகளுடனும் கூட்டு நடவடிக்கை எடுக்க மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வலியுறுத்துவதாக கூறுவதும் அதனைக் காரணமாகச் சொல்லியே பேச்சு வார்த்தைக்கென எழுப்பப்பட்ட பிரச்சினையிலிருந்தே பின்வாங்குவதும் நாணயமல்ல. இது அவருடைய அரசியல் அறியாமையையே காட்டுகிறது.

## கூட்டு நடவடிக்கை

இவ்வாறு குறிப்பிட்ட தோழர் பசவபுன்னையா கடந்த ஜனவரியில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக் கமிட்டி தீர்மானத்தை குறிப்பிட்டு கூறியதாவது:—

அத்தீர்மானத்தின்படி ஒரு குறிப்பிட்ட பிரச்சினை மீது அனைத்து வெகுஜன ஸ்தாபனங்களுடனும்—அவை எந்தக் கட்சி சார்புடையதாக இருந்தாலும்—கூட்டு நடவடிக்கை எடுப்பதற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ளது. இம்மாதிரியான கூட்டுநடவடிக்கை மார்க்சிஸ்ட் கட்சித் தலைவர்கள் பேச்சுவார்த்தைகளில் கலந்து கொள்வதன் தொடர்ச்சியாக மேற்கொள்ளப்படும்.

ஜனசங்கத்தை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஒருவகுப்பு வாதக் கட்சியாக கருதுகிறது. அக்கட்சியுடன்தவிர்த்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் நிலைபாட்டிற்கு ஆதரவு தரும் எந்தக் கட்சியுடனும் கூட்டு நடவடிக்கை எடுப்பதில் தயக்கம் வைத்திருக்கவில்லை.

தொழிலாளர்களின் உரிமைகளும், வாழ்க்கைத்தரமும், பாதிக்கப்பட்டால் அதற்கெதிராக வலது கம்யூனிஸ்ட் கடசியும் அதன் கொள்கைகளும், திருத்தல்வாதத் தலைவர்களும் சம்பிரதாயமான சுங்களது எதிர்ப்புகளை தெரிவிக்கின்றனர் என்ருர் தோழர்பசவபுன்னையா. மேலும் அவர் தொடர்ந்து கூறுகையில், இம்மாதிரியான வேலைகள் அக்கட்சித்தலைமையின் கொள்கைகளை அக்கட்சியின் ஊழியர்களும் ஆதரவாளர்களும்புரிந்துகொள்ள உகவியது; அவர்களை பொது இயக்கங்களுக்குள் கொண்டு வர உதவியது என்றும் தோழர் பசவபுன்னையா தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

## மக்களது மேலாதிக்கம்

மேலும், அரசியல் சட்ட திருத்தம் மீது மார்க்சிஸ்ட் கட்சியின் நிலை பற்றி ராஜேஸ்வரராவ் கூறியுள்ளதானது பொறுப்பற்ற முறையில் உருச் சிதைத்து கூறியதாகும். மார்க்சிஸ்ட் கட்சியின் நிலையை அவமானப்படுத்தவே அவர் விரும்பியுள்ளார்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய கமிட்டியானது அரசியல் சட்ட திருத்தம் பற்றிய தீர்மானத்தில், சிறு சொத்துடைமையாளர்களுக்கு சொத்துரிமை அளிக்கும் திருத்தம் வேண்டுமென்றும் அத்திருத்தம் ஏகபோக முதலாளிகள், நிலப்பிரபுக்களின் சொத்துரிமையை ஒழிக்க வேண்டுமென நேரடியாக கூறப்பட்டுள்ளது என்றும் தோழர் பசவபுன்னையா குறிப்பிட்டுள்ளார்.

நாடாளுமன்ற ஆதிக்கமா நீதிமன்ற ஆதிக்கமா என்ற உருச் சிதைக்கப்பட்ட முரண்பாடான பிரச்சினையில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் நிலைபற்றி ராஜேஸ்வரராவ் விமர்சித்திருக்கும் முறை அடாவடித்தனமானது. வலது கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்கள் தவருன முறையில் வியாக்கியானம் செய்வதுபோல் நாடாளுமன்றத்தின் மீது நீதிமன்ற ஆதிக்கத்தை மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி ஆதரித்ததில்லை. அரசு அதிகாரத்தின் பிரிவுகளாகிய நாடாளுமன்றத்திற்கும் நீதிமன்றத்திற்குமிடையே ஏற்படும் முரண்பாட்டில் மக்களின் மேலாதிக்கத்தையே மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தூக்கிப்பிடிக்கிறது என்றும் தோழர் பசவபுன்னையா கூறியுள்ளார்.

## விமர்சிப்பதிலிருந்து விலக முடியாது

நாங்கள், சோவியத் வலது திருத்தல்வாதக் கொள்கைகளை விமர்சிப்பதால் ராஜேஸ்வரராவ் எங்கள்மீது கோபமாக இருக்கிருர். நாங்கள் அவருக்கு அடிபணிய முடியாது; வலது திருத்தல் வாதத்தையோ அல்லது இடது திருத்தல் வாதத்தையோ விமர்சிப்பதிலிருந்து நாங்கள் விலக முடியாது என்றும் தோழர் பசவபுன்னையா குறிப்பிட்டார்.

சென்னையில் நடைபெற்ற மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்தியக்கமிட்டி எடுத்த தீர்மானத்தின் வெளிச்சத்தில் தான் வலது கம்யூனிஸ்ட் கட்சியுடன் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்கட்சி பேச்சு வார்த்தை நடத்தியது. இரண்டு கட்சிகளின் பொதுவான நண்பர்களின் யோசனையின்பேரில் ராஜேஸவரராவ் தன்னுடைய கட்சியை கலந்தாலோசிக்கவும் கலந்து விவாதித்த பிரச்சினைகளை மார்க்சிஸட் கமயூனிஸட் கட்சிக்கு அறிவிக்கவும் ஒப்புக் கொண்டார். ஆனல் இதனைச் செய்வதற்குப் பதிலாக பத்திரிகைகளிடம் சென்றுவிட்டார். "நான் அவரைச்சந்தித்ததால் நான் எந்த விஷயத்தையும் இழந்துவிடவில்லை. ஆனல் ராஜேஸ்வரராவினுடைய அறிக்கையினல் அவர்நிலையின் திரை அகற்றப்பட்டது" என்று கேள்வியொன்றுக்கு பதில் அளிக்கையில் கூறினர்.

---

## உத்தரப் பிரதேசத்தில் லாக்கப் சாவுகள்

கடந்த 18 மாதங்களில் உத்தரப்பிரதேசத்தில் உள்ள 10 போலீஸ் வட்டாரங்களில் உள்ள 8 போலீஸ் நிலையங்களில் காவலில் இருந்த 22 கைதிகள் இறந்துள்ளனர். இவர்களில் 12 பேர் லக்னோ வட்டார காவல் நிலையங்களில் இருந்தார்கள். இவற்றில் 5 காவல் நிலையங்கள் கித்தாப்பூர் மாவட்டத்தைச் சேர்ந்தவை. இந்த லாக்கப் சாவுகளை தொடர்ந்து 2 சப்-இன்ஸபெக்டர்கள், 5 போலீசார், ஒரு தலைமைப் போலீஸ்காரர் ஆகியோர் மீது வழக்கு தொடரப்பட்டுள்ளது என்று உள்துறை அதிகாரி ஒருவர் தெரிவித்துள்ளார்.

விடுதலை 8—8—76

---

## சல்யூட்-5 விண்கலத்தின் ஒரு மாதப் பயணம்

சோவியத் யூனியன் விண்வெளிவீரர்கள் போரிஸவோலிஜேவும் விதாஸஜோலபோவும் ஆகஸ்ட் 7-ந் தேதியோடு விண்வெளி ஆராய்ச்சியில் ஒரு மாதத்தைப் பூர்த்தி செய்து விட்டனர். அகலச்-சிவப்பு டெலஸகோப்பான ஸபெக்ட்ரா மீட்டரின் உதவியால் தமது ஆராய்ச்சிகளைத் தொடர்ந்தனர் சூரிய மண்டலத்தையும் சூரியனுக்கு அருகிலுள்ள வெளியையும், அவர்கள் ஆராய்ந்தனர்.

---

நடக்க இருப்பவை

## தெ. ஆ. மாவட்ட எழுத்தாளர் சங்க மாநாடு

தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் தென்ஒற்காடு மாவட்ட் மாநாடு

**22—8—76-ந்தேதி விருத்தாச்சலத்தில் நடைபெறுகிறது.**

**கே. முத்தையா**
**செந்தில்நாதன்**
**தணிகைச் செல்வன்**

மற்றும் பலர் கலந்து கொள்கிருர்கள்.

# கொட்டும் மழையில் பல்லாயிரம் பேர் பங்கேற்ற இறுதி ஊர்வலம்.....

(1ம் பக்கத் தொடர்ச்சி)

மக்களும், மாதர்களும் நனைந்து கொண்டே இறுதிவரைகலந்து கொண்டனர்.

மயானத்தில் தோழர் என் சங்கரய்யா தலைமையில இரங்கல் கூட்டம் நடந்தது. கட்சிக்கும் மக்களுக்கும் தோழர் பழனிச்சாமி ஆற்றிய சேவையை நினைவு கூர்ந்தார்.

தோழர் பழனிச்சாமியின் அரசியல் வாழ்க்கையையும், அரிய சேவையையும் நினைவு கூர்ந்தும், இரங்கல் தெரிவித்தும் அதிமுக சார்பில் எஸ் முத்து, திமுக சார்பில் எஸ் காமராஜ், எம் எல் யூ சங்கம் சார்பில முத்துகிருஷ்ணன், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் எம ராமமூர்த்தி, ஸ்தாபன காங்கிரஸ் சார்பில் பி வடிவேல், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் கே பி ஜானகியம்மாள், சிஐடியூ சங்கங்கள் சார்பில் ப மு குமார் ஆகியோர் பேசினர்.

## குடும்ப பாதுகாப்பு நிதி

தோழர் பழனிச்சாமியின் குடும்பத்துக்கு ஒரு கணிசமான அளவில் நிதி திரட்டித்தரப் படும் என்றுதோழர்கே.பி.ஜானகியம்மாள் பேசும்போது குறிப்பிட்டார்.

தோழர் பழனிச்சாமியின் குடும்பப்பாதுகாப்பு நிதி வசூலில் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியும், ஏ ஐ டி யூ சி சங்கமும் பங்கு கொண்டு ஒத்துழைக்கும் என்று தோழர் எம்.ராமமூர்த்தி பேசும்போது அறிவித்தார்.

இந்த நிதி வசூலில் ஒத்துழைப்பதாக முன்னாள் மேயர் திரு. எஸ். முத்து கூட்டத்தலைவர் சங்கரய்யாவிடம் கூறினார்.

கடைசியில் தோழர் பழனிச்சாமியின் மூத்த புதல்வனை செல்வன் பாண்டியன் பழனிச்சாமியின் சிதைக்கு 'தீ' மூட்டிட, அதே சமயத்தில் அங்கிருந்த பல்லாயிரக்கணக்கான மக்களும் கண்ணீர் மல்க மௌன அஞ்சலி செலுத்தினர்.

தோழர் என் சங்கரய்யா, "தோழர் ஏ பி பழனிச்சாமியின் நாமம்" என்று மூன்று முறை ஒலிக்க, கூட்டத்தினர் அனைவரும் "வாழ்க!" என்று குரலெழுப்பி— தோழர் ஏ. பி பழனிச்சாமி எந்த இலட்சியத்துக்காக தன்னை அர்ப்பணித்துக்கொண்டாரோ, அந்த இலட்சியப் பயணத்தில் தொடர்ந்து செல்ல உறுதி பூண்டனர்.

## போடியில்

தோழர் பழனிச்சாமியின் மரணச் செய்தியறிந்து போடி நகரில் உள்ள செங்கொடிகள் அனைத்தும் அரைக்கம்பத்தில் பறக்கவிடப்பட்டன. கட்சி ஊழியர்கள் கறுப்பு பேட்ஜ் அணிந்தனர். மாலை 5 மணிக்கு ஜீவா நகரிலிருந்து இரங்கல் ஊர்வலம் புறப்பட்டது. இறுதியில் தோழர் பழனிச்சாமியின் சேவைகள் குறித்து தோழர்கள் எம். பாக்கியத்தம்மாள், எம். சிவனு ஆகியோர் பேசிய பின் இரு நிமிடநேரம் மௌனம் அனுஷ்டிக்கப்பட்டது.

## திண்டுக்கல்லிலிருந்து லாரி

மதுரையில் நடந்த இறுதி ஊர்வலத்துக்கு திண்டுக்கல் தோழர்கள் ஒரு லாரி மூலம் வந்து கலந்துகொண்டனர்.

---

# தோழர் ஏ.பி.பழனிச்சாமி மறைவு மாநிலக் குழு அஞ்சலி

தோழர் ஏ பி பழனிச்சாமி கடந்த 13—8—76ந் தேதி மாலை 6-15 மணிக்கு மரணமடைந்த செய்தி எமக்கு ஆழ்ந்த துக்கத்தை அளிக்கிறது. அடக்கம் செய்தபோது ஆயிரமாயிரம் தொண்டர்களும், பொது மக்களும், அரசியல்வாதிகளும் கண்ணீர் ஆருயப்பெருக்கி அஞ்சலி செலுத்திய காட்சி, அவர் மக்களுக்கு செய்த தியாகத்திறகு செலுத்திய அஞ்சலியாகும்.

முப்பது ஆண்டுகளுக்கு மேலாக கட்சியில் சேவை. மதுரை மாவட்டக்குழு செயலாளராக, மதுரை—முகவை மாவட்டக் குழு செயலானராக பல்லாண்டு, பல்லாண்டு. மாநில செயற்குழு உறுப்பினராகவும் பல்லாண்டு. மாவட்டத்தில், மாநிலததில் நடத்திய, நடைபெற்ற வெகுஜன இயக்கங்கள். அரசியல் நடவடிக்கைகள் அனைத்திலும், இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)டின் செயலாற்றல் உண்டென்றால் அதில் தோழர் ஏ பி பியின்பங்கும் அற்ப சொற்பமல்ல சாதாரண தொழிலாளியாக இருந்து கட்சியின் தலைமைக்கு உயர்ந்த உத்தம ஊழியராகும் அவர்.

கடந்த இரண்டாண்டு காலமாக மறைந்திருந்து அவரது மூளையையும், நரம்புகளையும் சாப்பிட்டு வந்த விஷப்பூச்சிகள், கண்மூடி திறப்பதற்குள் அவரது ஆவியையே அள்ளிக்கொண்டு சென்று விட்டன.

நம்மையெல்லாம் ஆழாத்துயரத்தில் ஆழ்த்திவிட்டுச் சென்றுவிட்ட தோழர் ஏ பி பி அவர்களின் நினைவுக்கு இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி(மார்க்சிஸ்ட்) யின் தமிழ் மாநிலக் குழு சிரமதாழ்த்தி செங்கொடி தாழ்த்தி, அஞ்சலி செலுத்திக் கொள்கிறது. அவரது மனைவிக்கும் குடும்பத்திற்கும் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறது.

—இந்தியக் கம்யூனிஸ்ட் க்ட்சி(மார்க்சிஸட்)
தமிழ் மாநிலக்குழு.

---

அரசியல் அமைப்புச் சட்டமாறுதல் பற்றி

# மதுரையில் கருத்தரங்கு

## இந்திய சமூக விஞ்ஞானக் கழகம் நடத்தியது

அரசியல் அமைப்புச் சட்ட மாறுதல்கள் பற்றிய கருத்தரங்கு ஒன்று மதுரையில் உள்ள இந்திய சமூக விஞ்ஞான கழகம் சார்பில் கடந்த 8-ந் தேதி தமுக்கம் கலையரங்கில் நடைபெற்றது.

அரசியல் சட்டத்தில் செய்யவேண்டிய மாறுதல் பற்றி சுவரண்சிங் கமிட்டி செய்துள்ள பரிந்துரைகள் மீது நாடு முழுவதும் விவாதங்கள் நடைபெற வேண்டும் என்று பிரதமர் இந்திராகாந்தி கேட்டுக் கொண்டதற்கிணங்க நடந்த இக்கருத்தரங்கிற்கு சழகத்தின் பொதுச்செயலாளர் திரு. அருணன் தலைமை வகித்தார்.

## கருத்துரை

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக் குழு உறுப்பினர் இ எம எஸ் நம்பூதிரிபாட், இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநில செயற்குழு உறுப்பினர் கே டி கே தங்கமணி தமிழக ஜனநாயக மாதர் சங்கத்தின் செயலாளர்பாப்பா உமாநாத், அகில இந்திய பலகலைக்கழக —கல்லூரி ஆசிரியர் சங்கங்களது ஒன்றிணைப்பின் துணைத் தலைவர் குமரேஷ்சக்ரவர்த்தி ஆகியோர் கருத்துரை ஆற்றினர். இறுதியில் சழகச் செயலாளர் த. கல்யாணசுந்தரம் நன்றி கூறினார்.

இக்கருத்தரங்கில் கலந்து கொண்டு கருத்துரை வழங்குவதாக இருந்த தி. மு. கழக நாடாளுமன்றக் குழுத்தலைவர் திரு இரா.செழியனும், அ. தி. மு.க. பொருளாதாரப் பிரிவு செயலாளர் திரு கா.காளிமுத்துவும் சில தவிர்கக இயலாத காரணங்களால் கலந்து கொள்ள இயலவில்லை என்று தெரிவித்து விட்டனர்,

இக்கருத்தரங்கில் கலந்து கொள்ள ஆளும காங்கிரஸ்கட்சியின் மாநிலச் செயலாளர் திரு ப. சிதம்பரம, தமிழக ஸ்தாபனக் காங்கிரஸ் கட்சி செயலாளர் திரு கோ. கலிவரதன் ஆகியோருக்கு அழைப்புக்கள் அனுப்பப்பட்டிருந்தன. ஆனால் இறுதிவரை ஒப்புதல் தெரிவித்து பதில் ஏதும் வரவில்லை என கழகத்தின் பிரமுகர் ஒருவர் கூறினார்.

## குழு விவாதங்கள்

இக்கருத்தரங்கை யொட்டி, அன்று காலையில், கழகத்தின் தலைவர் திருராஜன் தலைமையில் குழு விவாதங்கள் நடந்தன். இக்குழு விவாதத்தை தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிபாட் துவக்கிவைத்து உரையாற்றினார். அரசியல் சட்டத்தை, "அடிப்படை உரிமைகளும் வழிகாட்டும்நெறிமுறைகளும்" "மத்திய—மாநில அரசுகளுக்கிடையேயான அதிகார ஒதுக்கீடுகள்," "சட்டமன்றமும் நீதிமன்றமும்" என்று மூன்று பிரிவுகளாகப் பிரித்து நடந்த குழுவிவாதங்களில், பேராசிரியர்கள் வழக்கறிஞர்கள், டாக்டர்கள், தொழிற்சங்கம், மாதர் சங்கம் வாலிபர் முன்னணி, மாணவர் சங்கம்போன்றவெகுஜனஸ்தாபனங்களின் பிரதிநிதிகள்பங்கு கொண்டனர்.

குழு விவாதங்களின்இறுதியில் குழுத் தலைவர்கள் சமர்ப்பித்த தொகுப்புரைகளில்— அரசியல் அமைப்புச் சட்ட மாறுதல்கள் சம்பந்தமாக விரிந்து பரந்த அளவில் நாட்டு மக்கள் விவாதிக்க இன்னும் போதிய அவகாசம் அளிக்கப்பட வேண்டும் என்பது போன்ற பொதுவான கருத்துக்கள் வலியுறுத்தப்பட்டிருந்தன.

இக்கருத்தரங்கிற்கு திரளான மக்கள் கலந்து கொண்டனர்.

---

## பாதயாத்திரையின் போது அரிஜனங்கள் முறையீடு

திருத்தணித் தாலுகாவில், கடந்த வாரம் முன்னாள் முதல்வர்பக்தவச்சலமும், செங்கை மாவட்ட காங்கிரஸ் தலைவர் மணலி ராமகிருஷ்ணனும் பாதயாத்திரை சென்றபோது, குமாரராஜபேட்டையைச் சேர்ந்த சுமார் 100 அரிஜனங்கள் ஒரு கோரிக்கை மனுவைக் கொடுத்தனர். அதில்,

இவ்வூரிலுள்ள நிலச்சுவான்தார்கள் இங்கு விவசாய வேலைசெய்யும் அரிஜனங்களுக்கு அரசு நிர்ணயித்த கூலியைக் கொடுக்க மறுத்துவிட்டனர் என்றும், கூலி கேட்டதற்காக விவசாய வேலைக்கே சேர்த்துக் கொள்ளாமல்,வெளியூர் ஆட்களைக் கொண்டு வந்து வேலைக்கு அமர்த்துகின்றனர் என்றும், இதனால் இவ்வூரில் உள்ள 100 அரிஜனங்கள் வேலையில்லாமல் பசியாலும் பட்டினியாலும் வாடுகின்றனரென்றும் ஊரைவிட்டே ஓடவேண்டிய நிலை ஏற்பட்டிருப்பதாகவும் தங்களுக்கு வாழ்வு கொடுக்குமாறும் அவர்கள் தங்கள் மனுவில் கோரிள்ளனர்.

—நவசக்தி 10—8—76

---

# ஏ. பி. பழனிச்சாமி குடும்ப பாதுகாப்புநிதி

## மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மதுரை முகவை மாவட்டக் குழு வேண்டுகோள்

அன்புள்ள,

தோழர்களே, நண்பர்களே,

பெரியோர்களே, தாய்மார்களே!

மறைந்த தோழர் ஏ. பி. பழனிச்சாமி அவர்கள் கடந்த 30 ஆண்டு காலத்துக்கு மேலாக தொழிற்சங்க இயக்கததிலும் மக்கள் இயக்கத்திலும் கம்யூனிஸ்ட் கட்சியிலும் அரும்பணியாற்றினர் என்பதும் மார்கசிஸ்ட் கம்யூனிஸ்ட் கடசியின் மதுரை—முகவை மாவட்டச் செயலாளராக பல வருடங்கள் செயலாற்றினர் என்பதும் நீங்கள் அறிந்ததே.

கடந்த 13—8—76-ந் தேதியன்று காலமான தோழர் ஏ பி பழனிச்சாமி ஒரு பெரிய குடும்பத்தை விட்டுவிட்டுச் சென்றுள்ளார். நாட்டின் சேவைக்கும் தொழிலாளர் வர்க்க இயக்கத்திற்கும் தன் வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணிதத தோழர் பழனிச்சாமியின குடும்பததைக் காப்பது பொதுமக்கள் அனைவரின் கடமையாகும்.

தொழிலாளர்கள், விவசாயிகள், பொதுமக்கள் மற்றுமுள்ள அரசியல் கட்சிகளைச்சார்ந்த நண்பர்கள் ஆகியோரது ஒத்துழைப்புடன் தோழர் பழனிச்சாமியின்குடும்ப பாதுகாப்பு நிதியை வசூலிப்பது என்று நாங்கள் முடிவு செய்துள்ளோம்.

எனவே, சிறந்ததொரு மக்கள் ஊழியராகத் திகழ்ந்த தோழர் ஏ பி பழனிச்சாமியின் குடும்ப பாதுகாப்பு நிதிக்கு சகல பகுதி மக்களும் அன்புடன் தாராளமாக நிதி அளிக்கும்படி பணிவுடன் கேட்டுக்கொள்கிறோம்.

இப்படிக்கு,
இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)
மதுரை—முகவை மாவட்டக்குழு.

1, மண்டையன் ஆசாரி சந்து,
டவுன்ஹால் ரோடு.
மதுரை—625001